14th December 1961]

திட்டங்கள் இருக்கின்றன. ஆகவே சர்க்கார் மீது குற்றச் சாட்டு சொல்ல ஒன்றும் இல்லே. அதை வெளியில் மீட்டிங்குகளில் பேசிக்கொள்ளலாம்.

*Regional Engineering College*

* 2355-*W Q.*—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the location where the Regional Engineering College, as provided for in the Third Five-Year Plan is to be located;

(*b*) when it is expected to function; and

(*c*) the number of students expected to be admitted in it?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) It is proposed, in consultation with the Government of India, to locate the Regional Engineering College at Tiruchirappalli.

(*b*) The Government of India have been urged to give clearance for starting the College in 1962–63.

(*c*) It is proposed to admit 250 students each year ultimately.

SRI M. KALYANASUNDARAM: இந்த 250 மாணவர்களும் நம் ராஜ்யத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவார்களா அல்லது இதர ராஜ்யங்களுக்கும் இதில் இடம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதர ராஜ்யங்களுக்கும் ஒதுக்கப்படும்.

DEPUTY SPEAKER: Questions are over.

[NOTE.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—VOTING ON DEMANDS FOR ADVANCE GRANTS FOR THE YEAR 1962–63 (VOTE ON ACCOUNT). 9-30 a.m.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Deputy Speaker, I would like to make one submission. The hon. Member Sri M. Kalyanasundaram and myself, the two Party Leaders present here just now, have agreed to press only the Cut Motion under Demand No. I—Land Revenue and not the cut motions to the other demands. Also, we have agreed that we might have a discussion only on Demand Nos. X—Elections, XI—District Administration and XIV—Police. As the time at our disposal is very short, we both have agreed that this method may be adopted.

*Demand I—Land Revenue.*

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 35,50,000 as advance grant for the year 1962–63 under Demand I—Land Revenue."

[14th December 1961

**SRI S. M. ANNAMALAI** : Sir, I move the cut motion standing in my name viz.,

"That the allotment of Rs. 35,50,000 as advance grant for the year 1962-63 under Demand I—Land Revenue be reduced by Rs. 100."

DEPUTY SPEAKER : The Demand and the Cut Motion are before the House for discussion.

**SRI S. M. ANNAMALAI** : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, நான் கொடுத்திருக்கக்கூடிய முதல் வெட்டுப் பிரேரணை பேர் ரெண்ட் ஆக்டைத் திருத்த வேண்டும் என்பது. காரணம், திட்டக் கமிஷனே சொல்லியிருக்கிறது; இப்பொழுது இருக்கும் 60 : 40 வாரமானது மக்களுக்குப் போதாமல் ஏறத்தாழ நாலு அணு, நாலு தம்பிடி வரும்படிதான் வருகிறது. ஆகவே, வாரம் பயிரிடுகிறவர்களுக்கு போதாமல் இருப்பதால், அதை 75 : 25 என்று மாற்றவேண்டும் என்கிறேன். இதை ப்ளானிங் கமிஷனும் இரண்டாவது திட்டகாலத்திலேயே உயர்த்த வேண்டும் என்று சொல்லிக்கொண்டு இருந்தது. அதைப் போலவே இப்பொழுது திட்டக் கமிஷன் உயர்த்தவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கிற நேரத்திலே, இந்த சர்க்கார் இதைக் கவனித்து உடனடியாக இந்த பேர் ரெண்ட் சட்டத்தைத் திருத்தி வாரம் பயிரிடுபவருக்கு 75 : 25 ஆக இந்த விகிதத்தை உயர்த்தவேண்டுமென்று முதல் வெட்டுப் பிரேரணையைக் கொடுத்திருக்கிறேன்.

அடுத்தபடியாக புறம்போக்கு நிலங்களை தர்காஸ்து செய்கிற பொழுது மிகவும் கால தாமதம் ஆகிறது. புறம்போக்கு நிலங்களுக்கு வரி விதித்து அதன் பிறகு தர்காஸ்து செய்வதால் தாமதம் ஏற்படுகிறது என்று சட்ட மன்றத்தில் பல தடவைகள் எடுத்துச் சொல்லியபொழுது, நமது ரெவின்யூ அமைச்சர் அவர்கள் நாங்கள் அதிகமாக செய்துகொண்டு வருகிறோம் என்று சொன்னார்கள். உண்மையிலேயே புறம்போக்கு நிலங்களை அஸெஸ்டு வேஸ்டாக மாற்றிக் கொடுப்பதில் கால தாமதம் ஆகிறது. இதற்காக டெபுடி தாஸில்தார்களையும், ரெவின்யூ இன்ஸ்பெக்டர்களையும் தனியாக போட்டிருந்தும்கூட மிகவும் காலதாமதம் ஆகிறது. நான் ஏற்கெனவே ஒரு நட்சத்திர குறியீடு இல்லாத கேள்வி கொடுத்து அதிலே வட ஆற்காடு மாவட்டத்திலே எத்தனை ஏக்கர்கள் இப்பொழுது தர்காஸ்து செய்து கொடுக்கப்பட்டிருக்கின்றன என்று கேட்டபொழுது கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கிற புள்ளி விவரங்களைப் பார்த்தால் மிகவும் வேதனையாக இருக்கிறது. வடாற்காடு மாவட்டத்திலே எத்தனை ஏக்கர் புறம்போக்கு நிலங்கள் உள்ளன, அவைகளில் தாலூக்கா வாரியாக 1959, 1960, 1961 ஆண்டுகளில் எத்தனை ஏக்கர் நிலங்கள் தீர்வை விதித்த தரிசு நிலங்களாக மாற்றப்பட்டு பட்டா வழங்கப்பட்டன என்று நான் கேட்ட கேள்விக்கு, வெல்லூர் தாலூக்காவிலே 4,245.52 ஏக்கராவுக்கு 14.20 ஏக்கராதான் 1961-லே தர்காஸ்து செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. அதேபோல் போளூர் தாலூக்காவிலே மொத்தம் 42,346.57 ஏக்கராவில், 1959-ல் 5.03 ஏக்கரும், 1960-ல் 3.05 ஏக்கரும், 1961-ல்

0.13 ஏக்கரும் தர்காஸ்து செய்துகொடுக்கப்பட்டிருக்கிறது. திருவண்ணாமலை தாலுக்காவைப் பொறுத்தவரையில், மொத்தம் 950 ஏக்கராவில் 1959-ம் ஆண்டில் ஒரு ஏக்காகூட தர்காஸ்து செய்து கொடுக்கப்படவில்லை. 1960-ம் ஆண்டில் 8.32 ஏக்கர்தான் தர்காஸ்து செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. 1961-ம் ஆண்டில் ஒன்றுமே கிடையாது. இப்படி ஒவ்வொரு தாலுக்கா வாரியாக எடுத்துக்கொண்டு மொத்தத்தைக் கூட்டிப் பார்த்தால், மொத்தம் 1,77,566 ஏக்கரா புறம் போக்கு நிலங்கள் வடாற்காடு மாவட்டத்திலே இருக்கின்றன. இதிலே 1959-ம் ஆண்டில் 18.98 ஏக்கராவும், 1960-ல் 264.17 ஏக்கரும், 1961-ல் 19.98 ஏக்கராவும் தர்காஸ்து செய்து கொடுக்கப் பட்டிருக்கிறது. இதைப் பார்க்கும்பொழுது, நிலமில்லாத ஏழை மக்கள் தர்காஸ்து செய்து கொடுக்கவேண்டுமென்று பல விண்ணப்பங்கள் போட்டாலும்கூட, அதற்காக தனி அதிகாரிகளை தாலுக்காவாரியாக நியமித்து இருந்தும்கூட எந்த அளவுக்கு இந்த நிலங்கள் தர்காஸ்து செய்து கொடுக்கப்பட்டிருக்கின்றன என்பதை நாம் ஓரளவு தெரிந்துகொள்ள முடிகிறது. சிவோஜிமா, அனாதினம் போன்ற நிலங்களை கொடுத்துவிட்டு இவ்வளவு ஏக்கர் நிலங்கள் கொடுத்திருக்கிறோம் என்று சட்ட மன்றத்தில் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் பேசலாம். ஆனால் புறம்போக்கு நிலங்களை அஸெஸ்டு வேஸ்ட்டாக மாற்றி தர்காஸ்து செய்து கொடுப்பதிலே மிக மிக கால தாமதம் ஏற்பட்டிருக்கிறது. வடாற்காடு மாவட்டத்திலே உள்ள ஏறத்தாழ 1,77,000-ம் ஏக்கரிலே 1959 முதல் 1961 வரை உள்ள மூன்று ஆண்டுகளிலே சுமார் 300 ஏக்கரா நிலங்கள்தான் தர்காஸ்து செய்து கொடுக்கப் பட்டிருக்கின்றன. இது சர்க்காரின் நிர்வாகம் மிகவும் மோசமான நிலையில் நடைபெறுகிறது என்பதை எடுத்துக் காட்டுகிறது. சர்க்கார் பாமர மக்களிடத்திலே காட்டுகிற பரிவு அதிகாரிகளிடத்திலே இல்லை என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். நிலமில்லாத ஏழைகளுக்கு நிலங்களை வினியோகிப்பதன் மூலமாகத்தான் உணவு உற்பத்தியை பெருக்க முடியும். அதற்காக மத்திய சர்க்கார் ஒரு கமிட்டியை நியமித்து அந்த கமிட்டியார் இப்பொழுது விசாரணை செய்து வருகிறார்கள். அவர்களுடைய அறிக்கையும் கூட கூடிய சீக்கிரத்தில் கிடைக்கும். ஆகவே இந்த மாதிரி புறம்போக்கு நிலங்களை உடனடியாக தர்காஸ்து செய்து கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். மக்கள் விண்ணப்பித்தாலும்கூட 5, 6, 7 ஆண்டுகளில்கூட பட்டா கொடுப்பது கிடையாது. அப்படியில்லாமல் துரிதமாக 2, 3 மாதத்துக்குள்ளேயே சர்க்கார் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வெட்டுப் பிரேரணையை இந்த சபை முன்னால் வைக்கிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN:** ஸார், இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில விஷயங்களை தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். சர்க்காருக்கு சொந்தமாக தரிசு நிலங்கள் நமது ராஜ்யத்திலே லட்சக் கணக்கான ஏக்கர்கள் இருக்கின்றன. இந்த நிலங்களை ஏழை விவசாயிகளுக்கு கொடுப்பதற்கு

விருப்பமில்லாத அளவிலே பல ஆண்டு காலமாக விவசாயிகள் இந்த நிலத்தை அனுபவித்து வந்தும் அவர்கள் பேரிலே பட்டா செய்து கொடுக்க முடியாத நிலைமை இருக்கின்ற காரணத்தினாலே இன்றைக்கு உணவு உற்பத்தி தடைப்பட்டிருப்பதை நாம் பார்க்கிறோம். நிலம் அவர்களுக்கு சொந்தம் என்ற நிலைமை இருந்தால்தான் அவர்கள் மேலும் பாடுபட்டு உணவு உற்பத்தியை பெருக்குவதற்கான ஒரு சூழ்நிலையை உண்டாக்க முடியும். இருபது அல்லது 40 வருஷமாக அவர்கள் பயிர் செய்து வரும் நிலத்தை அவர்களுக்கு பட்டா செய்து கொடுக்க முடியாத நிலைமை இருப்பதோடு மாத்திரம் அல்லாமல் திடீரென்று வேறு பலர் பேரில் மாற்றக்கூடிய நிலைமையும் இருந்து வருகிறது. அதிலும் குறிப்பாக 1958-ம் ஆண்டு பஞ்சாயத்து சட்டம் வந்தபிறகு, பஞ்சாயத்திலே இருக்கக்கூடிய தலைவர்களும், மெம்பர்களும் தங்களுக்கு வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் என்ற அடிப்படையிலே, அந்த நிலம் பஞ்சாயத்துக்கு வேண்டுமென்று சொல்லி பல ஆண்டு காலமாக அனுபவித்து வந்தவர்களை திடீரென்று வெளியேற்றி, தங்களுடைய சொந்தக்காரர்களுக்கும், அவர்களைச் சார்ந்த ஜாதிக்காரர்களுக்கும் கொடுக்கக்கூடிய நிலைமை இன்றைக்கு பல பஞ்சாயத்துக்களிலே பரவி வருகிறது. ஆகவே சர்க்காரே ஒரு பெரிய நிலப்பிரபுவைப் போல் இருந்து கொண்டு அந்த நிலங்களை கொடுக்க தயங்கக்கூடிய நிலைமை இருக்குமானால் மற்ற நிலப்பிரபுக்கள் எந்த அளவுக்கு கொடுப்பதற்கு உற்சாகத்துடன் முன் வருவார்கள் என்பதை நாம் பார்க்க வேண்டும். ஆகவேதான் இந்த நிலங்களை எந்த அளவுக்கு உடனடியாக பட்டா செய்து கொடுக்கமுடியுமோ அந்த அளவுக்கு சீக்கிரத்திலேயே முயற்சி செய்ய வேண்டும். அதேபோன்று வீடு இல்லாத பரம ஏழைகள் பலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்கவில்லையானாலும் வீட்டிற்கான மனையைக் கொடுத்தால் அவர்கள் சொந்தமாக ஒரு குடிசை போட்டுக்கொண்டு வாழ்க்கை நடத்தக்கூடிய அளவுக்கு உதவி செய்வதாக இருக்கும். ஆகையால் சர்க்காருக்கு சொந்தமாக இருக்கும் தரிசு நிலங்களை அவர்கள் பேரில் உடனடியாக பட்டா செய்வதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இந்த நியாய வாரச் சட்டம் பல ஆண்டுகளுக்கு முன்னால் கொண்டுவரப்பட்டு 60 : 40 என்ற விகிதம் நிர்ணயிக்கப்பட்டது. அன்றைக்கு இருந்த விலை வாசிகளையும் இன்றைக்கு இருக்கின்ற விலைவாசிகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் ஏறத்தாழ இரண்டு அல்லது மூன்று மடங்கு உயர்ந்திருக்கிறது. இதனால் விவசாயிகள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகவே 75 : 25 என்ற அடிப்படையிலே இதை மாற்றி அமைக்க வேண்டும், இதை சர்க்கார் உடனடியாக கவனிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, திரு. அண்ணாமலை அவர்கள் சர்க்கார் புறம்போக்கு நிலங்களையும் தர்காஸ்து நிலங்களையும் எப்படி பிரித்துக்

கொடுக்க வேண்டும் என்றும் அதைப்பற்றிய புள்ளி விவரங்களையும் எடுத்து விவரித்தார். அதில் இருக்கக்கூடிய சிக்கல்களையும் திரு. கோதண்டராமன் அவர்கள் ஓரளவு எடுத்து குறிப்பிட்டார்கள். இருவரும் இரண்டு வித அபிப்பிராயங்களை எடுத்துக் காட்டினார்கள். ஒருவர் சொல்லும்போது சாகுபடி பண்ணிக்கொண்டிருக்கிறவர்களிடமிருந்து நிலத்தை வாங்கி அதை நிலமில்லாதவர்களுக்கு பிரித்துக் கொடுக்க வேண்டும் என்று சொன்னார். மற்றொருவர் சொன்னதாவது யார் யார் விண்ணப்பங்கள் போட்டார்களோ அவர்களுக்கு எல்லாம் நிலத்தை பிரித்துக் கொடுக்க வேண்டும் என்று சொன்னார். இப்படி ஒருவர் சொன்னது மற்றொருவர் சொன்னதற்கு வித்யாசமாக இருக்கிறது. இப்படி அவர்கள் சொல்லுகிறபடி நிலங்களைக் கொடுத்து பட்டா செய்து கொடுத்துவிட்டால் அதில் எவ்வளவோ சிக்கல்கள் ஏற்படுவதற்கு இடம் இருக்கிறது. இது பல சங்கடங்களை உண்டாக்கும். அப்படி இல்லாமல் நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கொடுக்க எவ்வளவு துரிதமான நடவடிக்கை எடுக்க வேண்டுமோ அவ்வளவு துரிதமாக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டுத்தான் வருகிறது. நிலங்களை யார் யாருக்கு பட்டா செய்து கொடுக்க வேண்டுமோ அவர்களுக்குக் கொடுக்க எவ்வளவு துரிதமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக எடுத்துக்கொள்ளப்பட்டுதான் வருகிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதற்கும் ஓரளவு பெருமைப்பட வேண்டியதாகத்தான் இருக்கிறது.

அடுத்தபடியாக, நியாயவாரச் சட்டத்தைப் பற்றி குறிப்பிட்டார்கள். அதாவது நிலச் சொந்தக்காரர்களுக்கு 40-ம், குத்தகைதாரர்களுக்கு 60-ம் என்று இருப்பதை மாற்றி நில சொந்தக்காரர்களுக்கு 25-ம், குத்தகைக்காரர்களுக்கு 75-ம் என்ற அளவில் கொடுக்க வேண்டும் என்று மாற்றி அமைக்க வேண்டும் என்றும் சொன்னார்கள். ஆனால் அதற்குக் காரணம் சொன்னதைத்தான் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அதாவது விலைவாசிகள் உயர்ந்து போய்விட்டது அதனால் அப்படி அதிகப்படுத்திக் கொடுக்க வேண்டும் என்று குறிப்பிட்டார்கள். இந்தக் காரணத்தை எடுத்துக் கொண்டால் விலைவாசி உயர்வு என்பது குத்தகைக்காரர்களுக்கு மட்டும் அல்ல. நிலச் சொந்தக்காரர்களையும் இந்த விலை உயர்வு பாதிக்கிறது என்பதை எல்லோரும் ஏற்றுக்கொள்ளவேண்டும். ஆகவே அதை ஒரு காரணமாகக் காட்ட முடியாது. இரண்டு பேர்களுக்கும்தான் விலை உயர்வு ஏற்பட்டிருக்கிறது. இப்பொழுது நாம் நில உச்ச வரம்புச் சட்டத்தைக் கொண்டுவந்து நிறைவேற்றி இருக்கிறோம். அதன்படி குத்தகைக்காரர்களுக்கு எந்த அளவில் சட்டம் இயற்ற வேண்டும் என்று பரிசீலனையில் இருக்கிறது. கனம் அங்கத்தினர்கள் சொன்னதையும் அது சம்பந்தமாக சட்டம் இயற்றும்போது மனதில் வைத்துக்கொண்டு ஏதாவது செய்ய யோசிக்கப்படும் என்று நான் கருதுகிறேன். இந்த அளவில் கனம் அண்ணாமலை அவர்கள் தன்னுடைய வெட்டுப் பிரேரேபணையை வாபஸ்

[Sri C. Subramaniam] [14th December 1961

வாங்கிக் கொள்ளுவார்கள் என்று நினைக்கிறேன். அவ்விதம் வெட்டு பிரேரேபணையை வாபஸ் வாங்கிக்கொண்டு இந்த மானியத்தை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**Sri S. M. ANNAMALAI** : கனம் அமைச்சர் அவர்கள் சொன்ன அளவில்தான் நான் என்னுடைய வெட்டுப் பிரேரேபணையை வாபஸ் வாங்கிக்கொள்ளுகிறேன்.

The cut motion was by leave withdrawn.

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exeeding Rs. 35,50,000 as advance grant for the year 1962-63 under Demand I—Land Revenue."

The Demand was put and carried and the Grant was made.

*Demand II—Stamps Administration.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 9,50,000 as advance grant for the year 1962-63 under Demand II—Stamps Administration."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 9,50,000 as advance grant for the year 1962-63 under Demand II—Stamps Administration."

The Demand was put and carried and the Grant was made.

*Demand III—Forest.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 28,50,000 as advance grant for the year 1962-63 under Demand III—Forest."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 28,50,000 as advance grant for the year 1962-63 under Demand III—Forest."

The Demand was put and carried and the Grant was made.

*Demand IV—Registration Department.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 16,50,000 as advance grant for the year 1962-63 under Demand IV—Registration Department."

14th December 1961]

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 16,50,000 as advance grant for the year 1962–63 under Demand IV—Registration Department."

The Demand was put and carried and the Grant was made.

*Demand V—Motor Vehicles Acts—Administration*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 4,00,000 as advance grant for the year 1962–63 under Demand V—Motor Vehicles Acts—Administration."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 4,00,000 as advance grant for the year 1962–63 under Demand V—Motor Vehicles Acts—Administration."

The Demand was put and carried and the Grant was made.

*Demand VI—General Sales Tax and other Taxes and Duties-Administration.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 22,00,000 as advance grant for the year 1962–63 under Demand VI—General Sales Tax and other Taxes and Duties-Administration."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 22,00,000 as advance grant for the year 1962–63 under Demand VI—General Sales Tax and other Taxes and Duties-Administration."

The Demand was put and carried and the Grant was made.

*Demand VII—Irrigation.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 72,50,000 as advance grant for the year 1962–63 under Demand VII—Irrigation."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 72,50,000 as advance grant for the year 1962–63 under Demand VII—Irrigation."

The Demand was put and carried and the Grant was made.

*Demand VIII—Head of State Ministers and Headquarters Staff.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 46,50,000 as advance grant for the year 1962–63 under Demand VIII—Head of State Ministres and Headquarters Staff."

[14th December 1961

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 46,50,000 as advance grant for the year 1962-63 under Demand VIII—Head of State Ministres and Headquarters Staff."

The Demand was put and carried and the Grant was made.

*Demand IX—State Legislature.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 4,00,000 as advance grant for the year 1962-63 under Demand IX—State Legislature."

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 4,00,000 as advance grant for the year 1962-63 under Demand IX—State Legislature."

SRI M. A. MUTHIAH CHETTIAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த சட்ட மன்றம் சம்பந்தமாக உள்ள டிமாண்டைப் பற்றி பேச வேண்டும் என்று நான் நினைக்கிறேன். ஏனென்றால் இந்தச் சட்டசபை சமீபத்தில் கலையப்போகிறது. அதன் பிறகு இதற்கு புதிய அங்கத்தினர்கள் வரப்போகிறார்கள். பல அக்கிராசனர்களும் வரப்போகிறார்கள். இன்றைக்கு ஏன் இதைப்பற்றி பேசுகிறேன் என்றால் நாளைக்கோ அல்லது அடுத்த நாளோ எனக்கு பேசுவதற்கு சந்தர்ப்பம் கிடைக்குமோ கிடைக்காதோ என்ற அளவில் இப்பொழுதே இதைப்பற்றி பேசலாம் என்று முன் வந்தேன். (சிரிப்பு) இந்த சட்டசபையில் பல அக்கிராசனர்கள் இருந்திருக்கிறார்கள். பெரிய சபாநாயகர்கள் இந்த சட்டசபையில் இருந்திருக்கிறார்கள். இந்த சட்டசபை சபாநாயகரைப் பற்றி புகழாகப் பேசுவது இந்த ஊரில் மட்டும் அல்ல இதர இடங்களில்கூட இந்த சென்னை சட்டசபை சபாநாயகர்களைப்பற்றி புகழாகச் சொல்லுகிறார்கள். வெளி நாடுகளிலும் கூட அப்படியே புகழாகச் சொல்லுகிறார்கள். அதைக் கேட்டு நான் சந்தோஷப்படுகிறேன். இதைப் பற்றி பேசுவதற்கு இப்பொழுது சந்தர்ப்பம் கிடைத்ததால் அடுத்து வரும் இரண்டு மூன்று டிமாண்டுகளில் பேசுவதைப்பற்றி இப்பொழுதே பேசி விடலாம் என்றே பேசுகிறேன். (சிரிப்பு.) கடந்த இரண்டு ஐந்து ஆண்டு திட்டங்களை நல்ல முறையில் நிறைவேற்றி இருப்பதைக் கண்டு இந்த மந்திரி சபையைக் கண்டு வெளியிடங்களில் நன்றாக புகழ்ந்து பேசி வருகிறார்கள் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த சட்டசபையின் புகழ் இந்த மந்திரி சபையின் புகழ் இங்கு மட்டும் அல்ல பல இடங்களிலும் சொல்லப்பட்டு வருகிறது. இங்கு, ஸர் பி. ராஜகோபாலாச்சாரி அவர்கள் (சி. ராஜகோபாலாச்சாரி

14th December 1961] [Sri M. A. Muthiah Chettiar]

யார் இல்லை) பெரிய சபாநாயகராக இருந்திருக்கிறார். அப்படி புகழ் வரும்படி இந்தச் சட்டசபையில் எவ்வளவோ பேர்கள் அக்கிராசனம் வகித்து வந்திருக்கிறார்கள். நமது இந்தியாவிலேயே இந்த சட்டசபைதான் பெரிய புகழ் வாய்ந்ததாக இருக்கிறது. நான் சுமார் முப்பது வருஷ காலமாக இந்த சட்ட சபையில் அங்கத்தினராக இருந்து வருகிறேன். என்னுடைய அனுபவத்தில் இந்தச் சட்டசபையில் எந்த விதமான பாண்டி மோனியமும் கலாட்டாவும் நடந்ததாகவே இல்லை. இதைக்கண்டு நாம் பெருமைப்பட வேண்டியதாக இருக்கிறது. இதைக் கண்டு நான் சந்தோஷப்படுகிறேன். ஹௌஸ் ஆப் காமன்ஸில் கூட சமீபத்தில் பாண்டிமோனியம் ஏற்பட்டதாக தெரிய வருகிறது. இந்த சட்டசபையில் இல்லாமல் இருந்ததற்குக் காரணம் இங்குள்ள சபாநாயகரும் உதவி சபாநாயகரும் நல்ல முறையில் சபையை நடத்தி வருவதால்தான். அதைக் கண்டு நாம் பெருமைப்பட வேண்டியதாக இருக்கிறது. இப்படி சபாநாயகராக இருந்து பொறுப்பு ஏற்பது என்பது சாமான்யமானது அல்ல. மந்திரிகளையும் சபை அங்கத்தினர்களையும் நல்ல முறையில் நடத்திச்செல்ல வேண்டிய பொறுப்பு அவர்களுக்கு இருக்கிறது. சபையில் நல்ல நிலை ஏற்படுத்தக்கூடிய சக்தி அவர்களிடம்தான் இருக்கிறது. எல்லோரையும் ஒற்றுமையாக்கி ஒற்றுமைபடுத்திக் கொண்டு வரவேண்டிய பொறுப்பு சபாநாயகருக்கும் உதவி சபாநாயகருக்கும்தான் இருக்கிறது. அதற்கு அங்கத்தினர் களுடைய உதவி இல்லாமலும் கொண்டு வரமுடியாது. அந்த நல்ல முறையில் நம்முடைய சபாநாயகரும் உதவி சபாநாயகரும் கொண்டு வந்திருக்கிறார்கள். அதைக் கண்டு நாம் பெருமைப்பட வேண்டியதாக இருக்கிறது. அந்த நிலைமையில் நல்ல முறையில் இரண்டு ஐந்தாண்டு திட்டங்களையும் கொண்டு வந்து நிறை வேற்றி இருக்கிறார்கள். பெரிய அளவில் வேலை செய்திருக் கிறார்கள். மந்திரிசபை பெரிய வேலை செய்திருக்கிறார்கள் என்றால் இந்த சட்டசபையின் உதவி இல்லாமல் செய்ய முடியாது. சட்ட சபையிலுள்ள எல்லா பகுதி அங்கத்தினர்களுடைய உதவியும் இல்லாமல் இப்படிப்பட்ட பெரிய திட்டங்களைக் கொண்டு வந்து நிறைவேற்றுவது என்பது முடியாது. அது இந்த சட்டசபைக்கு பெரிய பெருமையைக் கொடுக்கிறது என்று எண்ணுகிறேன். இந்தச் சட்டசபையில்தான் முதன் முதலாக ஒரு பெண் உப சபாநாயகராக இருந்திருக்கிறார். அதைப்போலவே ஒரு பெண் இங்கு தான் முதன்முதலாக மந்திரியாக வந்திருக்கிறார். அந்தப் பெருமை கூட நமக்குத்தான் இருக்கிறது. அப்படி சில பெண் மணிகள் உதவி சபாநாயகராக வந்து இந்தச் சட்டசபையை எவ்வளவோ கண்ணியமான முறையில் நடத்தி இருக்கிறார்கள். இப்பொழுது தேர்தல் வரப்போகிறது. அதில் நான் தேர்ந்தெடுக் கப்பட்டு வரப்போகிறேனோ இல்லையோ, இப்பொழுதுள்ள உதவி சபாநாயகர் நிச்சயமாக தேர்ந்தெடுக்கப்பட்டு வருவார் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அப்படி அவர் மறுபடியும் வந்து உதவி சபாநாயகராகவே இருக்கவேண்டும். ஏனென்றால் இதற்கு முன் இருந்த உதவி சபாநாயகருக்கு இவ்வளவு வேலை

கிடையாது. இவர்தான் அதிகப்படியாக வேலை பார்த்திருக்கிறார். சபாநாயகர் இல்லாதபோதுதான் உதவி சபாநாயகர் அக்கிராசனம் வகிப்பார். அப்படி இவர்தான் அதிக காலம் அக்கிராசனம் வகித்திருக்கிறார். அதனால் இவருக்கு நல்ல வாய்ப்பு ஏற்பட்டிருப்பதால் இவரே மறுபடியும் உதவி சபாநாயகராக வரவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். இவர் எவ்வளவோ திறமையாக சபையை நடத்தி வந்திருக்கிறார் என்பதையும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 4,00,000 as advance grant for the year 1962–63 under Demand IX—State Legislature."

The Demand was put and carried and the Grant was made.

*Demand X—Elections.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

" That the Government be granted a sum not exceeding Rs. 4,00,000 as advance grant for the year 1962–63 under Demand X—Elections."

DEPUTY SPEAKER : Motion moved—

" That the Government be granted a sum not exceeding Rs. 4,00,000 as advance grant for the year 1962–63 under Demand X—Elections."

SRI M. KALYANASUNDARAM : கனம் உதவி சபாநாயகர்
10-00 a.m. அவர்களே, தேர்தல் நெருங்கிக்கொண்டிருக்கிறது. தேர்தலையொட்டிச் செலவு செய்யவேண்டிய காரணத்தினாலே நான்கு லட்ச ரூபாய் கோரிக்கை கேட்டிருக்கிறார்கள். இந்த 1961-62ம் ஆண்டிலேயே அந்த மான்யத்திலே பெரும் பகுதி செலவழிக்கப்பட்டுவிடும். ஆகையால்தான் தொகை குறைவாக இருக்கிறது. ஜனநாயகம் நம் நாட்டிலே வளர்ந்தோங்க வேண்டுமானால், அதற்கு எல்லா அரசியல் கட்சிகளுக்கும் பொறுப்பு இருக்கிறது. ஆளும் கட்சியைப் பதவியிலிருந்து அகற்ற வேண்டும் என்ற நோக்கத்துடனே வேலை செய்வதற்குக்கூட எதிர்கட்சிகளுக்கு உரிமை இருக்க வேண்டும். ஆளுங் கட்சியும், தாங்கள் பதவியில் இருக்க வேண்டும் என்று விரும்புவதில் தவறு இல்லை. அதுதான் ஜனநாயகத்தின் அடிப்படையே. ஆனால், எங்கு நம்மை அகற்றி விடுவார்களோ என்று ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள் ஏதாவது குறுக்குப் பாதையில் இறங்கினாலும் சரி, ஜனங்களுடைய ஆதரவு இல்லாவிட்டால்கூட, எப்படியாவது ஆளும் கட்சியைப் பதவியிலிருந்து அகற்ற வேண்டுமென்று குறுக்குப் பாதையில் இறங்கினாலும் சரி, ஜனநாயகத்திற்கு ஆபத்து என்பதுதான் என்னுடைய கருத்து. அந்தக் குறுக்குப் பாதை எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். குறுக்குப் பாதை, அரசியல் கண்ணியத்தை

14th December 1961] [Sri M. Kalyanasundaram]

யெல்லாம் விட்டுப் பேசுவது, தாக்குவது, அல்லது அரசாங்க இயந்திரங்களை உபயோகப்படுத்துவது போன்ற முறைகளிலே இருக்கலாம். அந்தக் குறுக்குப் பாதைகள் கூட இருக்கக்கூடாது என்பதுதான் என்னுடைய அபிபபிராயம்.

நேற்றைய தினம் பேசுகிறபோது நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள், 'விசேஷமாக, தேர்தலுக்காக வேண்டிய இந்த வருஷ அறிக்கையைத் தயாரிக்க வேண்டிய அவசியம் இல்லை, ஒவ்வொரு ஆண்டும் ஜனங்களுடைய ஆதரவைப் பெறுவதற்காக வேலை செய்து வந்திருக்கிறோம்' என்று. அது நியாயம். ஒவ்வொருவரும், அதுவும் பதவியில் இருக்கும் கட்சியில் இருப்பவர்கள், ஜனங்களுடைய ஆதரவைப் பெறுவதற்கான வேலைகளைச் செய்யவேண்டும் என்பதிலே இரண்டு வித கருத்து இருக்கமுடியாது. அதை ஒரு குறையாக எதிர்க்கட்சியினர் கூறவும் முடியாது. ஜனங்களைத் திருப்தி செய்து, அவர்களுடைய வாக்குகளைப் பெற்று மீண்டும் பதவிக்கு வரவேண்டும் என்ற எண்ணம் நல்லதுதான். அந்த எண்ணத்தோடு வேலைசெய்வதை யாரும்—எதிர்க்கட்சியில் உள்ளவர்கள் கூட—குறை கூற முடியாது.

ஆனால், தேர்தலில் இறங்கிவிட்டால் அந்த எண்ணம் இருப்பதே கஷ்டமாக இருக்கிறது, இந்தச் சபையை விட்டு வெளியே சென்றுவிட்ட போது. இந்தச் சபையில் பேசுகிறபோது, அரசியல் குரோதங்களைக்கூட மறந்து, ஒருவரையொருவர் பாராட்டுவதற்கும், ஒவ்வொருவரும் நன்றாக வாழவேண்டும் என்று வாழ்த்துவதற்குக்கூடப் பெருந்தன்மை இருக்கிறது. நேற்றைய தினம் கூட, நிதி அமைச்சர் அவர்கள் என்னுடைய உடல் நிலையைப் பற்றிக் குறிப்பிட்டு கவலை தெரிவித்தார்கள். நான் சீக்கிரம் குணமடைந்து பொதுப்பணியில் இறங்கவேண்டுமென்றும் வாழ்த்தினார்கள். அதற்கு நன்றியுடையவனாக இருக்கிறேன். அதேபோல், நாம் எல்லாக் கட்சிப் பிரச்சனைகளையுமே இந்தப் பெருந்தன்மையோடு அணுகவேண்டும். நான் அவரைப்பற்றிச் சொல்வதாக அர்த்தமல்ல. எல்லோருக்குமே சொல்கிறேன். பெருந்தன்மையோடு அணுகுவோமானால் தேர்தலை நாம் சுமுகமாக நடத்தி முடித்துவிட முடியும் என்பது என்னுடைய அபிப்பிராயம். முதல் இரண்டு பொதுத் தேர்தல்கள் அனேகமாக அதிகச் சம்பவங்கள் இல்லாமலேயே நடந்திருக்கின்றன. மூன்றாவது பொதுத் தேர்தல் வர இருக்கிறது. அதிலும் நம்முடைய ஜனங்களிடத்திலே நம்பிக்கை வைத்து, துணிவோடு இறங்கவேண்டும் எல்லாக் கட்சிகளும் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். என்னுடைய கட்சிச் சார்பிலும் அப்படித்தான் நான் கருதுகிறேன். ஆனால், தேர்தல் சட்டங்களில் எது எது தகாதது என்று குறிப்பிட்டிருக்கின்றதோ அதையே நாம் நடை முறையில் செய்வது வருத்தத்தை அளிக்கிறது. அது தேர்தல் நியாயமாக நடைபெறுவதற்கு முட்டுக்கட்டையாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

முதலாவது, தேர்தல் காலத்தில் அரசியல் கட்சிகள் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதைப்பற்றி நாம் பேசி ஒரு ஒழுங்கு விதிக்கு வருவதுகூட நல்லது என்று நான் நினைக்கிறேன். கிராமத்தில் தகராறு ஏற்பட்டால், பெரிய மனிதர்களைக் கூட்டி வைத்துப் பஞ்சாயத்து செய்து தகராறைத் தீர்த்துக்கொள் கிறோம். அதே போல் சர்வ தேச விஷயத்திலேகூட எல்லோரும் கூடிப் பேசிச் சிக்கல்களைத் தீர்த்துக்கொள்ளவேண்டும். சமாதான மாக இருக்கவேண்டும் என்று பெரிய நாடுகளெல்லாம் ஒரு பக்கத் தில் அணுகுண்டு இருந்தாலும்கூட இன்னொரு பக்கத்தில் பேச்சு வார்த்தையில் அதிக நம்பிக்கை வைத்துப் பேசுகிறார்களே தவிர, வெறும் பலத்தையே நம்பியிருக்கவில்லை. அதுபோன்று நம் முடைய ராஜ்ய விஷயத்தில்கூட, அரசியல் சிக்கல்களைத் தீர்க்க வேண்டிய பிரச்னைகளில் எல்லாக் கட்சிகளும் ஒன்றாக உட்கார்ந்து அவர்களுடைய கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டு, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையோடு வேலை செய்வோமானால் ஒரு சிறந்த உதாரணமாக இருக்கும் என்பது என்னுடைய அபிப் பிராயம். தேர்தலில் கட்சிகள் எப்படி நடந்துகொள்ளவேண்டும், தேர்தல் நேரத்தில் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் எப்படி நடந்து கொள்ளவேண்டும், இவைகளைப்பற்றி பேசி ஒரு முடிவுக்கு வருவது அவசியம் என்று நான் கருதுகிறேன். அதற்கான நடவடிக்கையும் எடுக்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள் கின்றேன். இதற்கு முந்திய வருஷத்தில் கூட இதுமாதிரி பேச்சு வார்த்தை நடந்தது. அதில் நாம், கூட்டம் கூட்டுவது, மைக் லைசன்ஸ் போன்ற பிரச்சினைகளைக் குறித்துப் பேசினோமே தவிர, அரசியல் கட்சிகள் எப்படி நடந்துகொள்ளவேண்டும், கட்சிக் கூட்டங்களில் எப்படி ஒருவரையொருவர் குறை கூறுவது என்பதைப்பற்றிப் பேசவில்லை. அரசியல் ரீதியிலே குறை கூறுவதை நான் ஆட்சேபிக்கவில்லை. எதிர்கட்சியினருடைய திட்டத்திலே இருக்கும் குறைபாடுகளை, எதிர்கட்சியினர் செய் திருக்கும் காரியங்களில் பலவீனங்கள், குறைபாடுகள் இருந்தால், ஆளும் கட்சியில் இருப்பவர்கள் நன்றாகச் சுட்டிக் காட்டட்டும். அதை வரவேற்கத் தயாராயிருக்கிறேன். அதுபோன்று அரசாங்கம் நடத்தியவர்கள் செய்திருக்கக்கூடிய குறைகளை, குறைபாடுகளை எடுத்துக் கூறுவதற்கு எதிர்கட்சிக்கும் உரிமை உண்டு. அதையும் அவர்கள் குறை சொல்ல முடியாது. ஆனால், தனிப்பட்ட முறையில் கேவலமாகத் தாக்குவதோ, அல்லது பொய் பேசி, அவதூறுகளைப் பொழிவது சரியல்ல என்பது என்னுடைய அபிப்பிராயம். அவற்றை எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் கைவிடவேண்டும் என்பதுதான் என்னுடைய யோசனை. அந்த நோக்கத்துடன்தான் இதைப் பற்றிப் பேசவேண்டும் என்பது யோசனை. தேர்தலிலே வோட்டுப் பெறுவதற்கு வேறு எந்தக் காரணத்தையோ சாதனைகளையோ சொல்லிக் கேட்கட்டும். அல்லது, செய்யப் போவதைச் சொல்லிக் கேட்கட்டும். ஜாதியையோ அல்லது வேறு சலுகைகளையோ காட்டி வோட்டுக் கேட்பது சரியல்ல என்பது என்னுடைய அபிப்

பிராயம். குறிப்பாக, தேர்தல் நேரத்தில் வோட்டுக்குப் பணம் கொடுப்பது என்பது மிகவும் ஒரு கேவலமான காரியம். அது ஜனநாயகத்திற்கே ஊறு விளைவிக்கக்கூடிய காரியம். ஆகவே தான் தேர்தலில் ஒவ்வொரு தொகுதிக்கும் எவ்வளவு செலவு செய்யலாம் என்று கட்டுபடுத்தப்படுகிறது, வரையறுக்கப் படுகிறது. அந்த வரையறையையும் மீறி, நாம் லட்சக் கணக்கான ரூபாய்களைச் செலவு செய்து இந்தச் சபையில் வந்து உட்கார்ந்தால் இந்தச் சபைக்குத்தான் என்ன கௌரவம் ஏற்படும் என்பதை எல்லாக் கட்சிகளைச் சேர்ந்தவர்களும் சிந்திக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன். ஜனங்களுடைய ஆதரவையே நம்பியிருப்போமானால் அப்பொழுது என் பணத்தைச் செலவழிக்கவேண்டும்? வோட்டுக்குப் பணம் கொடுக்கவேண்டும், இன்னும் பல தகாத காரியங்களைச் செய்ய வேண்டும் என்பதையெல்லாம் சிந்திக்கவேண்டும். தற்காலிகமாக சங்கடம் ஏற்படலாம். ஆளும் கட்சியினர் துணிவாக அந்தப் பழக்கங்களுக்கு எதிராக உறுதியாக நிற்கவேண்டும், மற்றவர் களுக்கு உதாரணமாக நடந்துகொள்ளவேண்டும் என்பது என்னு டைய அபிப்பிராயம். அதிலும் கவனம் செலுத்தவேண்டும் என்று நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கின்றேன். நிதி அமைச்சர் அவர்கள் அத்தகைய கூட்டத்தைக் கூட்டினார்கள், 20-ந் தேதி கூடிப் பேசுவதற்காக. ஆனால், நிதி அமைச்சர் அவர்கள் கூறினார்கள் அப்படிக் கூட்டம் கூடுமானால், அதிலே நாம் இம்மாதிரி பிரச்சனைகளிலே கவனம் செலுத்தி, தேர்தலுக்குத் தகாத பழக்கங்கள் இருப்பதையெல்லாம் எல்லாக் கட்சிகளும் கைவிடவேண்டும் என்பதை வலியுறுத்தி, அதன்படி முடிவு எடுத்துக் கொண்டால்தான் நாம் மக்களிடத்தில், ஒழுங்கான வர்கள், நேர்மையானவர்கள் என்று காட்டமுடியும், மக்களுக்கும் இந்தத் தேர்தலில் நாம் செய்யக்கூடிய நடவடிக்கைகளிலும் நம்பிக்கை ஏற்படும் என்பதை எடுத்துக்கூற விரும்புகிறேன்.

தேர்தலில் எல்லாக் கட்சியினருக்கும் சம சந்தர்ப்பம் இருக்க வேண்டும் என்பது ஒரு முக்கியமான கோட்பாடு. எல்லா விஷயங்களிலும் சம சந்தர்ப்பம் இருக்கவேண்டும். நம்முடைய நாட்டிலே பின்தங்கிய நிலைமை இருக்கிறது. அரசியல் துறையில் கூட மக்கள் இன்னும் விழிப்புப் பெறாமல் பின்தங்கியிருக்கிறார்கள். ஏதோ சலுகைகளைச் செய்தால் அவர்களுக்கு வோட்டுப் போட வேண்டும் என்பது எல்லாப் பகுதிகளிலும் இருப்பது இயற்கை. அதைப் பயன்படுத்திக்கொண்டு இந்தச் சமயத்தில் திறப்பு விழாக்களிலோ கல்நாட்டு விழாக்களிலோ அமைச்சர்கள் கலந்து கொள்வது சரியல்ல என்பது என்னுடைய அபிப்பிராயம். சிலர் கூறினார்கள், தேர்தலுக்கு ஆறு மாதங்களுக்கு முன்னால் அமைச் சர்கள் ராஜினாமா செய்துவிடவேண்டும் என்று. நான் அப்படிக் கோரவில்லை. அமைச்சர்கள் பதவியில் இல்லாவிட்டாலுங்கூட, இன்னும் அம்மாதிரி அரசாங்க இயந்திரத்தைத் தங்களுக்கு உபயோகப்படுத்திக் கொள்ளவேண்டுமென்ற எண்ணம் இருந்தால் எப்படி வேண்டுமானாலும் உபயோகப்படுத்திக்கொள்ள முடியும்.

பதவியில் இருந்துதான் உபயோகப்படுத்துவது என்பது அல்ல. பதவியிலிருந்து அமைச்சர்கள் விலகிக்கொள்ளவேண்டுமென்ற கருத்தை என்னுடைய கட்சி வலியுறுத்தவில்லை. ஆனால், சில ஒழுங்கு விதிகளை அவர்களே மேற்கொள்வது உசிதமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன்.

தேர்தல் இயக்கம் இப்போதே ஆரம்பித்துவிட்டது. நாமினேஷன் தாக்கல் பண்ணியதிலிருந்துதான் ஆரம்பம் என்பதல்ல. அனேகமாக எல்லாக் கட்சிகளும் கடந்த ஒரு வருஷமாகவே இதைப்பற்றிய காரியங்களிலே இறங்கிவிட்டார்கள் என்று சொல்லலாம். இந்த வருஷத்தையே தேர்தல் வருஷமாக ஆக்கி விட்டார்கள். அப்படியிருக்கும்போது, இந்தச் சபையில் அமைச்சர்கள் ஆஸ்பத்திரியைத் திறந்து வைப்பதோ கட்டடங்களைத் திறந்து வைப்பதோ சரியல்ல. வேலை நடக்கட்டும். பூர்த்தி ஆகட்டும்.

ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கு மட்டும் அந்த வாய்ப்பு இருக்கிறது. அதை என்றைக்கும் அவர்கள் பயன்படுத்திக் கொள்ள முடிகிறது. அதுவும் தேர்தல் சமயத்தில் இந்த இடத்திற்கு ரோடு போடுகிறேன், இந்த இடத்திற்கு பஸ் வசதி செய்துகொடுக்கிறேன், இந்த இடத்திற்கு மின்சாரத்தை விஸ்தரித்துக்கொடுக்கிறோம் என்றெல்லாம் வோட்டுக் கேட்பதானது எதிர்கட்சிகளுக்கும், ஆளும் கட்சிக்கும் இடையே விரோதம் வளரத்தான் பயன்படும். ஆகவே தேர்தல் காலத்திற்கு முன் 3 மாதங்களுக்கு முன்பிருந்தே அமைச்சர்கள் எந்த விழாவிலும் கலந்துகொள்ளக் கூடாது என்பது என்னுடைய தாழ்மையான வேண்டுகோள்.

THE HON. SRI C. SUBRAMANIAM: We have issued an order that the Hon. Ministers will not use Government cars while on election tours in the districts from 15th December 1961.

SRI M. KALYANASUNDARAM: அப்படிச் செய்திருந்தால் ரொம்ப சந்தோஷம். கட்சியின் சார்பில் கூட்டங்களுக்குப் போகக் கூடாது என்று நான் சொல்லவில்லை. இன்னொன்று. "நீங்கள் எதிர்கட்சிக்கு வோட்டுப் போட்டால் இந்தப் பகுதியில் எந்தவிதமான அபிவிருத்தி வேலைகளும் நடக்காது" என்பதாக ஒரு தப்பான பிரசாரத்தை ஆளும் கட்சியைச் சேர்ந்த மற்றவர்கள் சொல்வது இருக்கட்டும், சில அமைச்சர்கள் கூடச் சொல்கிறார்கள். பேசுகின்றார்கள். எந்தக் கட்சி அதிகாரத்தில் இருந்தாலும் இத்தகைய ஒரு கொள்கை நல்லது அல்ல. அந்த மாதிரி பேசுவது கூடாது. இவைதான் அரசியல் கிரோதங்களை வளர்க்கின்றன. இன்னும் சொல்லப்போனால் நான் முயற்சி எடுத்து சில காரியங்களை முடிக்கவேண்டும் என்று முயல்கிற போது அந்தக் காரியங்கள் நடைபெறக் கூடாது என்று காங்கிரஸ்காரர்கள் சிலர் போய் வேண்டுமென்றே தடுக்க முயற்சிக்கிறார்கள். இதனால் ஜனங்களிடத்தில் எத்தகைய ஓர் உணர்ச்சி உண்டாகவேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்கள்,

14th December 1961] [Sri M. Kalyanasundaram]

"எதிர்க்கட்சிக்காரர்களால் இந்தக் காரியங்களைச் செய்ய முடியாது. ஆளும் கட்சியினருக்கு வோட்டுப் போட்டால் தான் இந்தக் காரியங்கள் நடக்கும்" என்ற எண்ணத்தை மக்களிடையே உண்டாக்க விரும்புகிறார்கள். அமைச்சர்கள் கூட இத்தகைய முயற்சியில் ஈடுபடுகிறார்கள். வேறுபல சாதனைகளைச் செய்து வோட்டுக் கேட்பதைப் பற்றி ஆட்சேபனை இல்லை. ஆனால் இதைப்போன்ற ஒரு காரியம் அரசியல் விஷமமே தவிர வேறு ஒன்றும் இல்லை. இந்தமாதிரியான காரியங்களில் யாரும் முயற்சிக்கக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். மற்றபடி கூட்டங்கள் போடுவது, மைக் லைசென்ஸ் வழங்குவது ஆகிய காரியங்களில் தாராளமாக இந்தத் தடவை வசதி அளிக்கப்படும் என்று நிச்சயமாக நம்புகிறேன். அமைச்சர் அவர்கள் வாக்குறுதி கொடுத்தமாதிரி கட்சித் தலைவர்களுடைய கூட்டம் நடைபெறுமானால் அந்தக் கூட்டத்தில் என்னுடைய யோசனைகளைக் கூறிக் கொள்ள தயாராக இருக்கிறேன். ஆகவே இத்துடன் என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI S. RAMASWAMI THEVAR :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் வெட்டுப் பிரேரணை மீது சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். 1952-ம் வருஷம், 1957-ம் வருஷம் ஆகிய இரண்டு வருஷங்களிலும் இரண்டு பொதுத் தேர்தல்களை நாம் பார்த்திருக்கிறோம். இப்போது மூன்றாவது முறையாகத் தேர்தல் நடக்கவேண்டியிருக்கிறது. இந்தத் தேர்தல் ஒழுங்கான முறையில் நடைபெறுவதற்குத் தக்க கவனம் எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியம். நாட்டில் தேர்தல் என்றால் ஒரு வெறி பிடித்துவிடுகிறது. பொதுவான சட்டதிட்டங்களைக் கூட மீறக் கூடியது நன்றாக இல்லை. அதிலும் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் ஏதோ தங்களுக்குத் தனிச் சலுகை இருப்பதாக நினைத்துக் கொண்டு அதிகாரிகளையும் மற்றவர்களையும் தம் போக்குக்கு இழுக்க முயற்சிக்கிறார்கள். முக்கியமாக 1952-ம் வருடத் தேர்தலில் ஒரு பூத்தில் ஒரு பிரிசைடிங் ஆபிசர் சாப்பிட்டுக்கொண்டிருந்தார். 1957-ம் வருடத் தேர்தலில் அரந்தாங்கித் தொகுதியில் 97-ம் நம்பர் பூத்தில் நூற்றுக்கணக்கான வாக்குச் சீட்டுகள் திருடப்பட்டு காங்கிரஸ்காரர்களுடைய பெட்டியில் போடப்பட்டிருக்கின்றன. அதுபோன்ற ஊழல்கள் இந்தத் தேர்தலில் நடைபெறக் கூடாது. தேர்தல் முறையே மாறியிருப்பதனால் அத்தகைய திருட்டுக் காரியங்கள் நடைபெறாது என்று நினைக்கிறேன். மக்களை ஏமாற்றி, பணம் கொடுத்து வாங்குவது என்றால் அது இந்த நாட்டுக்கே அவமானம். நம்முடைய மக்கள் வறுமை பிடித்த மக்களா? நேர்மையற்ற மக்களா? ஒரு ரூபாய், இரண்டு ரூபாய்க்கு அவர்களுடைய உரிமையைப் பறிக்க முயற்சிப்பது நம் நாட்டையே கேவலப்படுத்துவது ஆகும். மேலும் குறிப்பிட்ட ஓர் அளவு தொகை தான் சட்டசபைத் தேர்தலுக்கும் பார்லிமெண்டு தேர்தலுக்கும் செலவழிக்கவேண்டுமென்ற விதியிருக்கிறது. ஏதோ அந்தக் காலத்தில் அந்தத் தொகையை நிர்ணயித்தார்கள், அதை அதிக

மாக்கவேண்டுமென்று நிதி அமைச்சர் அவர்கள் சொன்னதாகத் தெரிகிறது. இந்த அளவு தொகைக்கே நேர்மையாக நடந்து கொண்டால் அதிக தொகை அவசியம் இல்லை. ஆனால் துரதிருஷ்ட வசமான இன்றைக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும்போதே, அந்தத் தொகுதிக்கு இவ்வளவு செலவழிக்க வேண்டும், அதற்கும் பணம் இருக்கிறதா என்றெல்லாம் பார்த்துப் பொறுக்குவது நல்லதாய் இல்லை.

இன்னொன்று. நமக்கு வோட்டளிப்பது வாக்காளர்கள். அவர்கள் வோட்டளிக்க வரும்போது சென்ற தேர்தல்களில் எல்லாம் பல மணி நேரம் வெய்யிலில் நிற்கும்படியாக நேரிட்டது. இத்தமுறை அப்படி இல்லாமல் அவர்கள் நிழலில் தங்கி வோட்டளிக்க வசதி செய்து தரவேண்டும். தேர்தல் சமயத்தில் அவசரம் அவசரமாக போனதடவை பூத் ஏற்படுத்தினார்கள். தீத்துத் தட்டிகளை விலக்கிக்கொண்டு வாக்காளர் யார் பெட்டியில் வோட்டுப்போடுகிறார் என்றெல்லாம் போனதடவை பார்க்கப் பட்டது. இந்தத் தடவை தேர்தல் முறைமாறியிருப்பதனால் அம்மாதிரி நடைபெற்றாலும் பயன் இருக்காது என்றாலும் பூத் சரியான இடங்களில் ஏற்படுத்தப்படவேண்டும். மேலும் தேர்தலில் சாதியைப்பற்றி பேசி வோட்டு வாங்குவது நன்றாக இல்லை. சாதிப் பூசல்களை வளர்ப்பது ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் தான் என்று வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன். சென்ற கூட்டத்தில்கூட முக்குலத்தோரைப் பற்றி இழிவாக எழுதி யிருந்ததைப் பற்றி குறிப்பிட்டேன். அத்தகைய தவறான செய்தியை வெளியிட்டதற்கு வருந்தி, திருத்தம் வெளியிடவேண்டு மென்று சொன்னேன். கோடிக்கு மேற்பட்ட ஒரு சமூகத் தினரை திருடர்கள் என்றும், கள்ளர்கள் என்றும் சொன்னது சரியல்ல. ஆனால் எங்கோ ஓர் மூலையில் வந்தது தான் என்று அமைச்சர் தட்டிக் கழித்துவிட்டார். அரைக்காசுக்குப் போன மானம் ஆயிரம் பொன் கொடுத்தாலும் வராது. அன்றைக்கு இழிவு செய்யப்பட்ட முக்குலத்தைச் சேர்ந்தவர்கள் தான் இன்றைக்கு ராமநாதபுரம், தஞ்சாவூர், மதுரை முதலிய ஜில்லாக் களில் எல்லாம் இன்றைக்கு பஞ்சாயத்து, கூட்டு முறை தலைவர்களாக வந்திருக்கிறார்கள். ஆகவே இப்படி சாதியைப் பற்றி தவறான பிரசாரத்தை ஆளும் கட்சியினர் செய்யக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். மற்றபடி தேர்தல் காலங் களில் மைக் லைசென்ஸ் வேண்டுமென்றால் டெபுடி இன்ஸ்பெக்டர் களிடம் சென்று கேட்கவேண்டியிருக்கிறது. இந்த அதிகாரத்தை சப்-இன்ஸ்பெக்டருக்கே கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். வரப்போகும் தேர்தலில் நிற்பவர்கள் நல்லமுறையில் மக்களிடம் வோட்டு வாங்கி நாட்டுக்குச் சேவை செய்யும் அளவில் தேர்தல் இம்முறை நடக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

**SRI K. ANBAZHAGAN :** தலைவர் அவர்களே, வருகிற தேர் தலையொட்டி தேர்தல் செலவுக்கென்று நிதி ஒதுக்குகிற இந்தச் சூழ்நிலையில் தேர்தல் நடைமுறைகள் எப்படியிருக்கவேண்டுமென்

பதைப் பற்றி சில கருத்துக்களைத் தெரிவிக்க வேண்டிய அவசியத்தில் நான் இருக்கிறேன். வாக்காளர்கள் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொள்வதில் எளிதான முறையிருக்க வேண்டுமென் பது விருப்பப் பட்டபோதிலும் பலயிடங்களில் வாக்காளர்கள் பதிவிற்காக விண்ணப்பித்தும் கூட அவர்கள் நேரிடையாகப் பதிவுச் செய்யப்படாமல் 15, 20 மைல்கள் தூரத்தில் இருக்கிற தலைமை நிலையத்திற்கு வரும்படி உத்தரவு அனுப்பியிருக்கிறார்கள். அங்கு அவர்கள் வந்து பதிவு செய்து கொள்ளவேண்டுமென்று தெரிவித்திருக்கிறார்கள். அதனால் பல கிராமங்களிலுள்ள மக்கள் இரண்டு மூன்று ரூபாய் செலவு செய்து தங்கள் பெயர்களை பதிவு செய்து கொள்ள முடியாத நிலையில் இன்று இருக்கிறார்கள். முதல் தடவை விண்ணப்பம் போட்டு பதிவு செய்து கொள்ள முடியாமல் மறுபடி விண்ணப்பிக்க வேண்டுமென்றால் 8 அணாவோடு சேர்த்து விண்ணப்பிக்க வேண்டியிருக்கிறது. அப்படிச் சொல்வது முறையல்ல, ஏற்கனவே விண்ணப்பித்து எந்தக் காரணத்தினாலாவது சந்தேகிக்கப்பட்டு விடப்பட்டு, அவர்கள் மறுமுறை விண்ணப்பிப்பதாயிருந்தால் இந்த எட்டணாவோடு சேர்த்து மறுபடி விண்ணப்பிக்கவேண்டுமென்று சொல்வது முறையல்ல. அதுமட்டுமில்லாது, சென்னை நகரில் கூட பல பகுதிகளில் வாக்காளர்கள் பெயர்கள் எடுக்கப்பட்ட நேரத்தில் பல பெயர்கள் விடப்பட்டு அவர்கள் இப்பொழுது விண்ணப்பித்திருக்கிறார்கள். அப்படி ஆயிரக்கணக்கில் விண்ணப்பிக்கப்பட்டிருக்கிற காரணத்தினால் அதிகாரிகள் சந்தேகித்து சில வட்டாரங்களில் இருப்பவர்களின் பெயர்களை சேர்ப்பதை கைவிட்டிருக்கிறார்கள். வேண்டுமானால் எல்லோரும் ரெவன்யூ அலுவலகத்திற்கு வாருங்கள் என்று 1,000 பேர்களுக்கு தெரிவித்திருக்கிறார்கள். இந்த முறையை ஓரளவு தளர்த்தி விட்டால் வாக்காளர்கள் முன் கூட்டியே நல்லமுறையில் பதிவு செய்து கொள்ள உதவியாகயிருக்கும். அடுத்து, வாக்காளர்களின் பெயர்கள் அச்சிடப்படும் பட்டியல் தெளிவாகயிருக்க வேண்டும். ஒரு பக்கத்திற்கு 20 அல்லது 30 பேர்கள் என்ற விதத்தில் நிர்ணயிக்கப்பட்டு ஒரு பக்கத்தில் மட்டும் அச்சிடப்பட்டால் அப்பட்டியல்களை வாங்குபவர்களும், அதை வாங்கி பயன்படுத்துகிறவர்களும் அதனால் நல்ல பலன் அடைய முடியும். இப்பொழுது பட்டியல் தெளிவாக அச்சிடப்படவில்லை. அடுத்து நான் தெரிவிக்க விரும்புவது, தேர்தலில் எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்து பல நல்ல பண்புகள் மக்களிடம் உண்டாக்க வேண்டுமென்று தெரிவிக்கிறார்கள். இதில் ஆளும் கட்சித் தலைவர்களுக்கு பொறுப்பு அதிகமிருக்கிறது. எதிர்கட்சியில் இருப்பவர்களின் பண்பு குறைந்திருக்கிறது என்று பேசி விட்டால் மட்டும் பண்பு காப்பாற்றப்பட மாட்டாது. அதைக் காப்பாற்றும் பெரும் பொறுப்பு ஆளும் கட்சித் தலைவர்களுக்கும், அமைச்சர்களாக இருப்பவர்களுக்கும் இருக்கிறது. அவர்கள், பொதுமக்களிடம் பணம் கொடுத்து வோட்டு கேட்டால் வோட் போடாதீர்கள் என்று சொல்ல வேண்டும். அவர்கள்தான் அந்த அறிவுரை வழங்க வேண்டும். ரூபாய்க்கு வோட்டு விற்காதீர்கள், அது மிக மிக கேவலமானது, ஜனநாயகத்தை இழிவுபடுத்துவது அந்த முறையை கைவிட்டு விடுங்கள் என்று ஆளும் கட்சி சார்பில், நிதியமைச்சர் சுப்பிரமண்யம் அவர்கள் ஒழுக்கத்

திலும், நாணயத்திலும், பெருந்தன்மையிலும் சிறந்தவர்கள் என்று கருதப்படுவதால் அவர்கள் அந்த அறிவிப்பை நாட்டு மக்களுக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். சட்டமன்ற ஆளும் கட்சித் தலைவர் என்ற முறையிலும் அதைத் தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்து, தேர்தல் காலத்தில் போலீஸ் இலாகாவினரிடமிருந்து பெற வேண்டிய அனுமதிகளுக்கு தேர்தலுக்கு நிற்பவர்களோ அல்லது அவர்களுக்காக உழைப்பவர்களோ, அவைகளைப் பெற பல நேரங்களில் இக்கட்டான நிலைக்கு ஆளாகிறார்கள். அதனால் ஏற்படுகிற தொல்லைகள் பற்றி போலீஸ் இலாகா பற்றி சொல்லும்போது சொல்லிக்கொள்கிறேன். ஒலிப் பெருக்கிக்கு அனுமதி வழங்குவது, 10½ மணி வரை கூட்டம் நடத்த ஒப்புதல் தருவது இவைகளில் அரசாங்கம் தாராள மனப்பான்மை காட்டி உடனடியாக அனுமதி வழங்க ஏற்பாடு செய்யவேண்டும். சிலயிடங்களில் செல்வாக்கு பெற்றவர்கள் தங்கள் கட்சிக் கூட்டத்திற்கு என்று மூன்று மாத காலத்திற்கு அனுமதி பெற்றுவிடுகிறார்கள், கோதண்டராமன் அவர்கள் தெரிவித்தார்கள், வேலூர் கோட்டை மைதானத்தை ஒரு கட்சிக்காரர் மூன்று மாத காலத்திற்கு பிடித்து வைத்திருக்கிறார்கள் என்று. கோட்டையை கைவிட்டு விட்டாலும் மைதானத்தைப் பெறுவதில் சளைக்கவில்லை. மைதானத்தை பிடித்து வைத்துக் கொள்வதின் மூலம் ஜனநாயக முறையில் கருத்துக்களைப் பரிமாற வாய்ப்பின்றி போய் விடுகிறது. ஆகவே அந்நிலை இல்லாமல் ஒரு கட்சிக்காரர்களுக்கு ஒரு நாள் என்றால் அடுத்த நாள் இன்னொரு கட்சிக்காரர்களுக்கு என்று தரப்படக் கூடிய வரை முறையை உண்டாக்க வேண்டும், இதற்கு வேண்டிய ஆணையிடவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். டிஸம்பர் 15-ம் தேதிக்குப் பின்னர் அமைச்சர்கள் அரசாங்கச் சார்பில் பெரும்பாலும் சுற்றுப்பிரயாணம் செய்ய மாட்டார்கள் தேர்தல் வருவதால், இப்படிச் சென்றால் அறிவித்து விட்டுத்தான் நடத்துவார்கள் என்று சொல்லப்பட்டது. அதோடு பக்கத்தில் அதிகாரிகள் வராது பார்த்துக் கொள்ளப்படுமென்றும் கூறப்பட்டிருக்கிறது. அதைக் கண்டு எனக்குக் கூட அமைச்சர்களிடம் இரக்கம் தோன்றுகிறது. இதுவரை தாராளமாக அனுபவித்ததை விட்டு விடுகிறார்களே என்று. என்னவிருந்தாலும் அமைச்சர் என்ற எண்ணம் அதிகாரிகளுக்கு ஏற்பட்டுத்தான் ஆகும். அதிகாரிகள் அமைச்சர்கள் சார்பாக பல காரியங்களை, பல கடமைகளை செய்து கொண்டிருக்கிறார்கள், நல்ல கடமையாகவும் இருக்கிறது, தீய கடமையாகவும் இருக்கிறது. அடுத்து, இனி அதிகாரிகளை மாற்றுவதில்லை என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் முன் ஜாக்கிரதையாகவே முன்னதாகவே பல அதிகாரிகளை சிலயிடங்களுக்கு மாற்றியிருக்கிறார்கள். வேலூரில் ஒரு சிறந்த என்ஜினியர் நல்ல பாதைப் போக்கு ஏற்படுத்தக் கூடியவர் வேலூரில் இருந்தார்கள். அவர் நன்கு வேலை செய்கிறார் என்று சொல்கிற மந்திரிகள் எல்லோரும் பார்த்தார்கள். அவரை இப்பொழுது சாத்தூருக்கு மாற்றியிருக்கிறார்கள். வாழ்க அமைச்சர் அவர்களின் திறமை. இனி மாற்றுவதில்லையென்று சொல்லும்போது வேண்டியவர்களை தேவையான யிடங்களுக்கு மாற்றிவிட்டு இப்படிச் சொல்கிறார்கள் இப்பொழுது. அவர் வந்து

14th December 1961] [Sri K. Anbazhagan]

மூன்றுண்டுகள் கூட ஆகவில்லை. அதோடு, எதிர்கட்சியினருக்கு தொல்லை தருகிறார்கள் என்று எடுத்துச் சொல்லியும் சிலர் அங்கிருந்து மாற்றப்படுவதில்லை, நேற்றையதினம் சுசிவர்ண தேவர் அவர்கள் எடுத்துச் சொன்னதுபோல். கடைசியாக நான் கேட்டுக் கொள்வது, அரசாங்கத்தில் பணியாற்றுகிறவர்கள் அரசாங்கத்திற்கு தொடர்பான நிலையங்களில் பணியாற்றுகிற வர்கள் அரசியல் சார்புடையவர்களாக இருக்கக்கூடாது என்று சொல்லப்படுவது பொதுக்கருத்து என்ற அளவில் அதை வரவேற்கிறேன். அரசியல் சார்பு என்பது எது என்று அமைச்சர் அவர்கள் வரையறைத்துக் கூற வேண்டும். ஒரு கொள்கையும் மனதில் இல்லாது எந்த அதிகாரியும் இருக்க முடியாது. ஐ.ஸி.எஸ். அதிகாரியாக இருந்தாலும் சரி, அவர்கள் கட்சி மனப்பான்மையோடு செயல்படாமல் இருக்கலாம், ஆனால் அவருக்கும் கொள்கை இருக்கத்தான் செய்யும். அப்படி அவருக்கு எண்ணங்கள் இருந்தால் அவரை அரசியல் சார்புடைய வர் என்று கருதக்கூடாது. அடுத்து, அமைச்சர்கள் தேர்தலுக்கு நிற்கும் வட்டாரத்தில் அங்குள்ள அரசாங்க அலுவலகர்களை அமைச்சருக்கு சாதகமாக பணியாற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். ஒரு ஆண்டுக்கு முன்னல் ஆவடியில் எஸ்.ஏ.பி. போலீஸ் இலாகாவினர், 3,000 பேர்கள் குடியிருக்கும் வட்டாரத்தில் ஒருவர் பஞ்சாயத்து தேர்தலுக்கு நின்றபோது அவர்கள் எல்லோரும் அந்த காங்கிரஸ் அங்கத்தினருக்கு வோட்டு அளிக்கவேண்டுமென்றும், வேறு கட்சிக்கு வோட்டு அளித்தால் அவர்கள் போலீஸ் இலாகாவில் இருப்பதை அனுமதிக்க மாட்டோம், ஒழித்து விடுவோம் என்று மிரட்டியிருக்கிறார்கள். நான் இதைச் சொல்கிறபோது அமைச்சர் அவர்கள் அதை ஆராய்ந்து பார்த்து நான் சொல்வது பற்றி முடிவு கட்டவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மூவாயிரம் பேர்கள் ஓரேயிடத்தில் குடி யிருக்கிறார்கள். அவர்கள் காங்கிரஸ் கட்சிக்குத்தான் வாக்களிக்க வேண்டும், எதிர்கட்சிக்கு வாக்களித்தால் அது அரசாங்கத்திற்குச் செய்யும் துரோகம், அவர்களை இலாகாவில் வைத்துக் கொள்ள மாட்டோம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு வேறு கட்சிக்காரர்கள் பிரசாரம் செய்ய அனுமதி தரப்படவில்லை. அது மட்டுமல்ல. ஒரே ஒரு சாவடியை வைத்து இங்குதான் வாக்கு போடவேண்டும், இங்குள்ள அத்தனை வோட்டுகளும் காங்கிரஸ்க்குத்தான் போடவேண்டும். இப்படிச் செய்யாது மற்ற கட்சிக்காரருக்கு போட்டால் அதைக் கண்டு பிடித்து விடுவோம் என்று மிரட்டியிருக்கிறார்கள். அப்படி 3,000 வோட்டுகள் காங்கிரஸ் கட்சிக்கு கிடைத்திருக்கிறது. மறுபடியும் அவர்கள் வோட்டு போடயிருக்கிறார்கள், பெப்ரவரியில். அங்கு பிரசாரம் செய்ய திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு அனுமதி கிடையாது. கம்யூனிஸ்ட் கட்சிக்கு அனுமதி கிடையாது. சோஷியலிஸ்ட் கட்சிக்கு அனுமதி கிடையாது. அந்த வட்டாரத்தில் காங்கிரஸ்தான் பிர சாரம் செய்கிறார்கள். அங்கு 3,000 வோட்டுகள் இருக்கின்றன. அங்குதான் இன்று போலீஸ் அமைச்சராக இருப்பவர் தேர் தலுக்கு நிற்கப் போகிறார் என்ற செய்தி கிடைக்கிறது. இந்த 3,000 வோட்டை எப்படி கணக்கிடுவது? ஆகவே பெருந்தன்மை

யாகவாவது ஒன்று அவர்கள் வோட்டு போடாமல் இருக்கவோ அல்லது வேறு ஒரு தொகுதிக்குச் சென்று போடவோ செய்யவும், மற்ற கட்சிக்காரர்கள் அங்கு பிரசாரம் செய்ய அனுமதிப்பதும், அல்லது அதை நான்கு சாவடியாக பிரித்தோ வழி செய்யவேண்டும். ஒரே சாவடி, ஒரே வட்டம். அந்த 3,000 வோட்டுகளை காங்கிரஸ் கட்சிக்குத்தான் போட வேண்டுமென்று சொல்லி, இல்லாவிடில் அவர்கள் தண்டனைக்கு ஆளாவார்கள் என்று சொல்லி அதை ஒருவரே பெற்றாலும் அதற்காக நாங்கள் கவலைப் படமாட்டோம், ஆனால் அதனால் ஜனநாயகம் செத்துப் போகிறது என்பதை சொல்லாமல் இருக்க மாட்டேன். ஒரு இடத்தில் அரசாங்கப் பணியாளர்கள் சேர்ந்தாற்போல் இருந்தால் அந்த இடத்தில் அமைச்சர்களோ அல்லது அதிகாரிகளோ தலையிட்டு ஒரு கட்சிக்குத்தான் வோட்டு போடவேண்டும் என்று சொல்லக்கூடிய நிலை ஏற்படாது, அதை தளர்த்தி அங்கு ஜனநாயகம் நுழைய வழி செய்யவேண்டும். அப்படிச் செய்தால்தான் இந்தத் தேர்தலைப்
10-30 a.m. பொறுத்தவரை அதிக வருத்தம் ஏற்படாமல், தலைவர்கள் மகிழ்ச்சியோடு கலந்து பேசுவதால் ஏற்படும் நல்ல பலனை தேர்தலுக்கு முன்பும், அதற்குப் பிறகும் காணமுடியும்.

கடைசி வேண்டுகோள், வானொலியில் கூட அரசியல் கட்சித் தலைவர்கள் பேசுவதற்கு வாய்ப்பு அளிப்பதாகத் தெரிவித்திருக்கிறார்கள். அதைப் பற்றி நான் அதிகம் விவரித்துப் பேசத் தேவையில்லை. எப்படி இன்றைக்கு கட்சிக்கு அடையாளம் தரப்படுகிறதோ அதே முறையில் அத்தனை பேருக்கும், எந்தக் கட்சியாக இருந்தாலும், ஒரே அளவு நேரம் ஒதுக்கப்படுவதுதான் சிறந்தது. வானொலி என்பது மிகவும் ஆற்றல் படைத்த பிரசார யந்திரமாகும். இந்த வானொலியில் பேசுவதற்கு ஆளும் கட்சிக்கு அதிக நேரமும் மற்ற கட்சிகளுக்குக் குறைந்த நேரமும் இருக்கும் அமைப்பு ஏற்படுமானால் அதிலும் தவறுதல் ஏற்பட்டது என்றுதான் கருதுவேன். வாய்ப்பு அளிக்கப்படுமானால் எல்லாக் கட்சிகளுக்கும்—அடையாளம் தரப்பட்ட கட்சிகளுக்காவது—ஒரே அளவு நேரம் ஒதுக்கப்பட்டு வானொலியைப் பயன்படுத்த சந்தர்ப்பம் அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, அமைச்சர் அவர்கள் சிந்திக்கவேண்டி எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri T. IRUSAPPAN** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, 1962-ல் நடக்க இருக்கின்ற தேர்தலில் செலவு செய்ய வந்திருக்கின்ற மான்யக் கோரிக்கை மீதும், அதே நேரத்தில் ஜனநாயக மக்கள் எப்படி வாக்களிக்க வேண்டுமென்ற முறையைப் பற்றியும் இரண்டொரு கருத்துக்களைச் சொல்ல முன் வந்திருக்கிறேன். தேர்தல் நடக்க இன்னும் இரண்டு மாதங்கள் இருக்கின்றன. இதற்கு முன்பாகவே ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் இன்னின்ன தொகுதியில் இன்னின்னார் நிற்கின்றார் என்று தெரிந்தவுடனே, எந்த ஒரு பள்ளிக்கூடத் திறப்பு விழாவாக இருந்தாலும், அடிக்கல் நாட்டு விழாவாக இருந்தாலும், ஐந்தாண்டுத் திட்ட சாதனைகளைப் பற்றி மக்களிடத்தில் ப்ராபகாண்டா செய்வதாக இருந்தாலும், அவைகளை ஏற்பாடு செய்கின்ற உத்தியோகஸ்தர்கள், அவர்கள் தான் அந்த விழாவிலே கலந்துகொள்ளவேண்டியவர், அவர்கள் தான் பேசுவதற்கு உரியவர் என்று அவர்களைத் தான்

14th December 1961] [Sri T. Irusappan]

அழைக்கிறார்கள். யார் அந்தத் தொகுதியில் நிற்கின்றார்களோ அவர்கள் அந்தத் தொகுதி மக்களுக்கு அறிமுகமானவராக இருந்தாலும் அல்லது அது வரையில் அறிமுகமில்லாதவராக இருந்தாலும் அவர்களை அறிமுகம் செய்து வைக்கக் கூடிய நிலைமை இருக்கிறது. இது முற்றிலும் ஜனநாயக முறைக்கு முரணானது—மாறுபட்டது—என்ற கருத்தை எதிர் கட்சியில் இருக்கின்றவர்கள் எடுத்துக் கூறும் நிலையில் இருக்கிறார்கள். இதை சர்க்கார் ஆலோசித்து இம்மாதிரி இருக்கக் கூடாது, ஜனநாயக சர்க்கார், ஜனநாயக முறைப்படி நடக்கவேண்டும், அதிலும் குறிப்பாக பணி புரிகின்ற அதிகாரிகள் மக்கள் மத்தியில் இருக்கவேண்டுமே தவிர, ஒரு கட்சி சார்பாக இருக்கக் கூடாது என்று இங்கே வலியுறுத்த விரும்புகிறேன். அதே நேரத்தில் கட்டுகின்ற கட்டிடம் அமைச்சர் வந்து தான் திறக்கவேண்டும், கவர்னர் வந்துதான் திறக்கவேண்டும், என்று அங்கு இருக்கின்ற அதிகாரிகளும், பஞ்சாயத்து யூனியன் சேர்மனும், மந்திரிகளையோ, கவர்னரையோ அழைக்கும் நிலை இருக்கிறது. ஒரு கட்டிடத்தை அமைச்சர் வந்து தான் திறக்கவேண்டுமா? இந்த மாதிரி அங்கு இருக்கின்ற தலைவர்களுக்கு அதிகாரிகள் உத்திரவு பிறப்பிக்கும் நிலையில் இருக்கக் கூடாது, இது ஜனநாயகத்திற்கு முரணானது என்று நான் வலியுறுத்த விரும்புகிறேன்.

அடுத்து, மூன்று மாதங்களுக்கு முன்னதாக அமைச்சர் கக்கன் சேலம் மாவட்டத்தில் கிராமப் புறங்களில் சுற்றி வந்தார்கள். பொது மக்களும் தாழ்த்தப்பட்ட மக்களும் வாய்க்கால், ஏரிகள், ஓடைகள், இம்மாதிரி பல விண்ணப்பங்கள் கொடுத்து இது வரையில் ஒரு பதிலும் தெரிவிக்கப்படவில்லை. இந்த ஐந்து ஆண்டுகளில் இரண்டு தடவைகள், மூன்று தடவைகள் சுற்றுப்பிரயாணம் வந்திருக்கிறார், ஆனால் இது வரையில் ஒரு பரிகாரமும் தேடப்படவில்லை. இதே நேரத்தில் 20-ம் தேதிக்கு மேல் சேலம் மாவட்டத்தில் நான்கு தொகுதிகள் இருக்கின்றன, தாழ்த்தப்பட்ட மக்கள் நிற்கும் தொகுதிகள். நாம் சொல்லுகிறோம் ஜாதி அடிப்படையில் இயங்கக் கூடாது என்று. ஜாதியைச் சொல்லி ஓட்டு கேட்கக் கூடாது என்று சொல்லுகிறோம். இந்த நிலை மாறவேண்டுமென்றுதான் தனித் தனி தொகுதியாக பிரிக்கப்பட்டிருக்கிறது. எல்லோரும் சமம், எல்லோருடைய ஒத்துழைப்பும் வேண்டும், நம்முடைய சட்ட மன்ற உறுப்பினர், எல்லா இனத்தவருக்கும் பொதுவானவர் என்ற நிலை உண்டாகவேண்டும் என்ற கருத்தில் இம்மாதிரி பிரிக்கப்பட்டிருக்கின்றது. அதே நேரத்தில் நான்கு தொகுதியிலும் நான்கு தாழ்த்தப்பட்ட லீக் மாநாடுகள் நடக்கப்போகின்றன. அந்த நான்கு மாநாடுகளிலும் அமைச்சர் கக்கன் பேசப் போகிறார் என்ற செய்தி வந்திருக்கிறது. அந்தப் பகுதிகளில் 2, 3 தடவை வந்திருக்கிறார், பல விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன, விண்ணப்பங்களுக்கு பரிகாரம் தேடப்படவில்லை, இப்போது வந்து இந்த நான்கு மாநாடுகளிலும் என்ன பேசப்போகிறார்? இன்னின்ன செய்யப் போகிறோம், காங்கிரஸில் இருக்கின்றவர்களுக்கு ஓட்டுக் கொடுங்கள் என்று சொல்லும் நிலைமைதான் வருமே தவிர வேறு என்ன வரும்? இதெல்லாம் தவிர்க்கப்படவேண்டும்.

[Sri T. Irusappan] [14th December 1961

ஆகையால் வரப்போகின்ற பொதுத் தேர்தல் ஜனநாயக முறையில் நடைபெற வேண்டுமென்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**SRI S. M. ANNAMALAI :** மன்றத் தலைவர் அவர்களே, இப்போது 1962-ம் ஆண்டு தேர்தல் நெருங்கிக் கொண்டிருக்கிறது. தேர்தல் செலவுக்காக வேண்டி இங்கு வரவு-செலவு கணக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. தேர்தலைப் பொறுத்த வரையில் ஒருவர் 9,000 ரூபாய் தான் செலவு செய்யவேண்டுமென்று தேர்தல் விதி முறைகள் இருந்தாலும்கூட, ஜனநாயக முறையில் தேர்தல் நடந்தாலும்கூட, 100-க்கு 90 பேர்கள் 9,000 ரூபாய் செலவழித்து சட்ட மன்ற, பாராளுமன்ற உறுப்பினர்களாக வருகிறார்கள் என்று யாரும் சொல்லமாட்டார்கள். இப்போது ஜனநாயக முறையில் தேர்தல் என்று சொன்னாலும் பண நாயக முறையில்தான் இன்றைக்கு நடந்து வருகிறது. நாளடைவில் இந்தச் சூழ்நிலை மாறக்கூடிய முறையில் எல்லாக் கட்சிகளும் ஒன்று சேர்ந்து, பொது நலத்தில் அக்கறை உள்ளவர்களெல்லாம் ஒன்று சேர்ந்து நடவடிக்கைகள் எடுத்தாக வேண்டும். பணம் படைத்தவர்கள் பணத்தைச் செலவு செய்து தேர்தலில் வரும் நிலைமையைத் தவிர்க்க அதற்கான முயற்சிகள் எடுக்கவேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சென்ற தேர்தலில் ஓட்டுச் சீட்டுகள் கொடுத்தார்கள். இந்தத் தேர்தலிலே மார்க்கிங் ஸிஸ்டம் வைத்திருக்கிறார்கள். இதற்கு ரப்பர் ஸ்டாம்ப் கொடுக்கப் போகிறார்கள் என்று கேள்விப்படுகிறேன். வாக்குச் சீட்டில் ரப்பர் ஸ்டாம்ப் குத்துவார்கள். ரப்பர் ஸ்டாம்பைக் குத்தி அது உலரும் முன்பாக அந்த வாக்குச் சீட்டை மடிக்கும் நிலைமை உண்டாகும். அப்படி மடிக்கும் போது அந்தக் குறி—அடையாளம்—இன்னொரு இடத்தில் விழுந்து விடும். அப்போது இன்வாலிட் வோட்ஸ்—செல்லுபடியாகாதது—என்ற நிலைமை வரும். இதை சர்க்கார் பரிசிலனை செய்து ரப்பர் ஸ்டாம்ப் குத்தும் முறை நல்ல முறையில் நடைபெறுமா, இன்வாலிட் ஓட்ஸ் அதிகம் ஏற்படுமா என்று பரிசிலனை செய்து, முன்பு கொடுத்ததைப் போல, சிகப்பு பென்ஸில், நீலப் பென்ஸில் கொடுத்து மார்க் செய்யச் சொல்லப்படும் என்று முன்பு சொல்லப்பட்டது, இப்போது ரப்பர் ஸ்டாம்ப் வைக்கின்ற காரணத்தினால் அதிகப்படியான இன்வாலிட் ஓட்ஸ் உண்டாகுமோ என்ற அச்சம் இருப்பதால் இதை சர்க்கார் பரிசிலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சர்வ கட்சித் தலைவர்களெல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு முடிவிற்கு வரவேண்டுமென்று பொதுவுடமைக் கட்சித் தலைவர்கள் சொன்னார்கள். அது வரவேற்க வேண்டிய விஷயம். உண்மையிலேயே இன்றைக்கு நடைபெறுகின்ற பிரசாரங்களைப் பார்த்தால் நேரடியாக ஒருவரைக் குறித்து, தங்களுடைய கட்சியின் கொள்கையைச் சொல்வது கிடையாது, காங்கிரஸ் கட்சி என்றால் அவர்களுடைய கொள்கை என்ன, திராவிட முன்னேற்றக் கட்சி என்றால் அவர்கள் கொள்கை என்ன, பொது உடைமைக் கட்சி என்றால் அவர்கள் கட்சிக் கொள்கை

என்ன என்று சொல்லுவது கிடையாது. அதற்கு பதில் நேரடியாக ஒருவரைத் தாக்கிப் பேசினுல்தான், மேடை மீது ஏறுகின்ற போதே அந்த மாதிரி தாக்கிப் பேசினுல் தான் மக்கள் கை தட்டி நகைக்கிருர்கள் என்று சாதாரண மக்களைத் தவருன முறையில் அழைத்துச் செல்லுகிருர்கள். ஆகையால் கூடுமான வரையில் எல்லாக் கட்சிக்காரர்களும் ஒன்று சேர்ந்து அவரவர்கள் கொள்கையை மேடை மீது ஏறிச் சொல்லி மக்களுடைய வாக்கைப் பெற வாய்ப்பு இருக்கவேண்டுமே தவிர, ஒருவரைத் தாக்கிப் பேசுவது, அங்கு அதனுல் கலவரத்தை உண்டாக்குவது என்ற முறையை மாற்றக்கூடிய நிலைமையை உண்டாக்க வேண்டும். இந்த முறையில் சர்வ கட்சித் தலைவர்களும் ஒன்று சேர்ந்து ஒரு முறையை அமைத்து தேர்தலை தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் அமைதியான முறையில் நடைபெற வேண்டிய எல்லா நடவடிக்கைகளும் எடுத்து சர்வ கட்சித் தலைவர்கள் கூட்டத்தில் நல்ல முடிவுக்கு வர வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: உதவி சபாநாயகர் அவர்களே, வரப்போகின்ற தேர்தல் நல்லமுறையிலே, ஒழுங்காக, கண்ணியத்துடன் நடக்க வேண்டுமென்பதைப் பற்றி பல கட்சித் தலைவர்களும், அங்கத்தினர்களும் வற்புறுத்திப் பேசினர்கள். அதை நான் முழு மனதுடன் வரவேற்கின்றேன். தேர்தல் நடைபெறுவது மட்டுமல்ல, தேர்தல் காலத்திலே நிறைய பிரசாரத்தை எல்லா கட்சிகளும் செய்கிருர்கள். இந்தப் பிரசாரத்தின் காரணமாக நாட்டிலே ஒரு நல்ல சூழ்நிலை ஏற்படுவதற்கு வழிசெய்து கொள்வது தான் நல்லது என்பது என்னுடைய கருத்து. தேர்தல் வந்து, போய்விடப் போகிறது. அதற்குப் பிற்பாடு ஐந்து வருஷங்கள் தொடர்ந்து பல பணிகள் இங்கே நடைபெற வேண்டும். அதற்கான நல்ல சூழ்நிலை மக்களிடத்திலே இந்தத் தேர்தல் காலத்திலே பயன்படுத்திக் கொள்வது மிகவும் அவசியமென்பது என்னுடைய கருத்து. ஆகவே, அவரவர்களுடைய கட்சிக் கருத்துக்களைச் சொல்கின்ற அதே காலத்தில், பொதுமக்கள் தேர்தலிலே பங்கு கொள்வது மட்டுமல்ல, தேர்தலுக்குப் பிற்பாடு நாட்டினுடைய அபிவிருத்தி வேலைகளிலே எப்படி ஈடுபட வேண்டுமென்பதையும் இந்த தேர்தல் காலங்களிலே பிரச்சாரம் செய்வது அவசியம். யார் நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்தினுலும், மக்களுடைய ஒத்துழைப்பைப் பெற்றுத்தான் பல பணிகளை நடத்த வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டிருக்கக்கூடிய காரணத்தினலே இந்தச் சூழ்நிலை ஏற்படுவதற்கு முயற்சி செய்கின்றதைக் குறித்து கட்சித் தலைவர்கள் யோசிக்க வேண்டுமென்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். முக்கியமாக இந்த விஷயங்களைப்பற்றியெல்லாம் முடிவு செய்வதற்காக 20-ம் தேதியன்று எல்லாக் கட்சிப் பிரதிநிதிகளும் வரவேண்டுமென்று அழைத்திருக்கிரேம். கட்சிப் பிரதிநிதிகள் வரவேண்டுமென்று அழைத்து இருக்கும்போது, ஒருவர்தான் வரவேண்டுமென்ற கட்டுப்பாடு இல்லை. இரண்டு, மூன்று பேர்கள் வேண்டுமானுலும் அவசியமிருந்தால் வரலாம். ஆனுல் ரொம்ப கூட்டம் வந்தாலும், முடிவு செய்வதிலே கஷ்டமேற்படும். ஆகவே அவசியமானவர்கள் வரலாம் என்ற கருத்தைச்

[Sri C. Subramaniam] [14th December 1961

சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். சென்ற தடவையும் இம்மாதிரி ஒரு கூட்டம் நடந்தது. ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்கள் கூறியதைப் போல, அப்போது நாம் குறுகிய எல்லேக்குள், வரம்புக்குள் தான் நாம் பேசி முடித்துக்கொண்டோம். இந்த முறை இன்னும் கொஞ்சம் விரிவாகப் பேசி, நமக்குள்ளேயே ஒரு ஒழுங்கு முறையிலே இந்த விஷயங்களைப் பற்றி முடிவெடுத்துக் கொள்ளலாம் என்று இப்போது குறிப்பிடப்பட்டிருக்கிறது. நாம் அனுசரிக்க வேண்டிய முறைகளைப் பற்றி அன்றைக்கு பரிசீலனை செய்து முடிவெடுக்கலாம். மேலும் எதையாவது பரிசீலனை செய்ய வேண்டுமென்று சொன்னுல், இப்போதே எழுதி கொடுப்பார்களானுல், யோசித்து வைப்பதற்கும் சவுகரியமாக இருக்கும். அதோடு மட்டுமல்ல. சென்ற தேர்தல் காலத்திலே நடந்த கூட்டத்தினுடைய விவரங்களும் அனுப்பப்பட்டிருக்கிறது. அதையும் படித்துப் பார்த்து, இன்னும் புதிதாக விவாதிக்க வேண்டியதைப் பற்றியும் எடுத்துச் சொன்னுல், அவைகளைப் பற்றி முடிவெடுக்க இடமிருக்கும். ஆகவே, இந்த எல்லாக் கட்சித் தலைவர்களுடைய கூட்டத்திலே நல்லதொரு முடிவெடுக்கப்படும் என்பது என்னுடைய நம்பிக்கை. இதிலே முக்கியமாக, வாக்காளர்கள் தங்களுடைய கருத்துக்களை நல்லமுறையிலே தெரிவித்து, நல்ல முடிவுக்கு வருவதற்கு எல்லோரும் உதவவேண்டும். அதற்காக பல குறுகிய வழிகளிலே சென்று மக்களுடைய ஆதரவைப் பெற முயற்சிக்கிருர்கள் என்று ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்கள் வற்புறுத்திப் பேசினுர்கள். அதிலும் முக்கியமாக பணம் கொடுத்து ஓட்டு வாங்குகிருர்கள் என்பதைப் பற்றி அவர்களும் குறிப்பிட்டார்கள். திராவிட முன்னேற்றக் கழக உப-தலைவர் அவர்களும் குறிப்பிட்டார்கள். இது உண்மையிலேயே வருந்தத்தக்க விஷயம். வருந்தத்தக்க விஷயம் மட்டுமல்ல. இந்த தேர்தல் விஷயமானது அப்போது ஒரு வியாபாரமாகவும் ஆகிவிடுகிறது. இதன் காரணத்தினுலே பின்னுலே பல காரியங்கள் ஏற்பட்டு விடுகிறது. இப்படி ஓட்டுக்களை பணம் கொடுத்து வாங்கும்போது, நாம் பணம் வாங்குவதிலேயும் தவறில்லை என்ற மனப்பான்மை தானுக வளர்ந்து விடுகிறது. ஒருவருக்கு நாம் பணம் கொடுப்பதால், நாம் பிறரிடம் பணம் வாங்குவதிலே தவறில்லை என்ற நிலேமை தானுகவே வந்து விடுகிறது. ஆகவே, பொது வாழ்க்கையிலே அப்போது ஒரு நேர்மையில்லாமல் போய்விடுகிறது. தேர்தலுக்காக எவ்வளவு செலவழித்தோம், அவற்றை எப்படி திருப்பி சம்பாதிப்பது என்ற நிலைமை ஏற்பட்டு விடுமானுல், அப்போது தேர்தல் எல்லாம் ஒரு வியாபாரமாகத் தான் வந்துவிடும். ஆகவே, நாட்டிலே இருப்பவர்களிடம் இது ஒரு தவருன முறை என்ற கருத்து ஏற்பட வேண்டும். இதே கருத்தை நாம் எல்லோரும் மனதிலே வைத்துக்கொள்வது மிகவும் அவசியமாகும். இதிலே இன்னென்றும்கூட. இன்றைக்கு ஓட்டர்களுக்குப் பணம் கொடுக்காமலேயே செலவை நாம் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று ஒரு நிலேமை ஏற்பட்டு வருகிறது. அதற்குள் செலவு செய்துவிட முடியும் என்று யாரும் சொல்ல முடியாது. சில சமயங்களில் அந்த சட்டத்திற்கு உட்பட்டு நடக்கின்ருேம் என்று சொல்கிருர்கள். தங்களுடைய மனசாட்சிக்குதான் செலவழித்த தொகை எவ்வளவு என்பது

14th December 1961] [Sri C. Subramaniam]

தெரியும். இதிலே மற்றவர்கள் செலவழித்த தொகையும் இருக்கும், கட்சி சார்பாக செலவழித்த தொகையும் இருக்கும். இவைகளைப் பார்க்கும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, இதிலே முக்கியமாக கட்சித் தலைவர்கள் போட்டியிடக்கூடிய இடங்களில் மற்றவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கக்கூடிய முறையிலே, செலவைக் குறைத்து கொண்டு வழிகாட்டியாக நடந்து கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு மட்டுமல்ல. இப்போது செய்யப்படுகின்ற செலவை எடுத்துக்கொண்டால் விளம்பரத்திற்காக பலவகையிலே செலவழிக்கின்றார்கள். ஒருவர் ஒரு மாதிரி விளம்பரம் செய்தால், மற்றொருவர் அதைவிட ஒருபடி அதிகமாக விளம்பரம் செய்கிறார். அதற்குமேல் அவர் செய்கிறார். இப்படி ஒருவருக்குள்ளே ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு விளம்பரம் செய்கிறார்கள். கடைசியில் நெட் எப்பெக்டைப் பார்க்கும்போது, வித்தியாசம் ஒன்றும் தெரியாது. ஆகவே, இரண்டு பேரும் குறைத்து செலவு செய்வது என்ற அளவுக்கு வந்தால், இரண்டு பக்கத்திற்கும் பலன் ஏற்படும். போட்டா போட்டி காரணத்தினாலே நம்மையும் மீறி பல செலவுகள் ஏற்பட்டு விடுகின்றன. ஆகவே, இந்தச் செலவைக் குறைத்துக் கொள்வதற்கு நாம் பேசி முடிவு செய்ததற்குப் பிற்பாடு, போட்டியிடும் அங்கத்தினர்களையும் அதிகம் செலவழிக்க வேண்டாமென்ற அளவுக்கு ஓர் ஒப்பந்தம் செய்து கொள்வார்களானால், நாட்டிலே அது ஒரு நல்ல சூழ்நிலையை ஏற்படுத்தும் என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இரண்டு பேரும் அதிகமாக செலவழிப்பதால், பணம்தான் வீணாகப் போகிறது. ஆகவே, இந்த முறையையும் நாம் முயற்சி செய்து, இதுமாதிரி செலவைக் கட்டுப்படுத்துவதற்கு நாம் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். அதுவும், தேர்தல் என்று சொன்னால், அதிகமாக செலவழிக்க யாரால் முடியுமோ அவர்கள் தான் தேர்தலுக்கு நிற்க முடியும், மற்றவர்கள் முடியாது என்று மலைத்துப் போகக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதனால், இதிலே தகுதியுள்ளவர்கள், அக்கறையுள்ளவர்கள் தேர்தலுக்கு நிற்க முடியாமல் போகின்றது. செலவு அதிகரிக்க அதிகரிக்க வேறு வழிகளிலே நிதி சேகரிக்கக் கூடியவர்கள் தான் தேர்தலிலே நிற்கும்படியான நிலைமை ஏற்படும்போது, நல்ல அங்கத்தினர்கள் வந்து பணியாற்ற முடியாத ஒரு சூழ்நிலை ஏற்பட்டு விடுகிறது. இதையெல்லாம் தேசிய சூழ்நிலையில் கவனிக்க வேண்டியது மிகவும் அவசியம் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்றைக்கு தேர்தலுக்கு அதிகமாக செலவழிக்க வேண்டுமென்ற காரணத்தினாலே, நம்மையும் அறியாமல் பல குறைகளைத் தேர்தல் காலத்திலே செய்ய வேண்டியிருக்கிறது; தேர்தலுக்குப் பிற்பாடு பணியாற்றுவதிலேயும் இந்தக் குறை நீடித்துக் கொண்டு வருவதற்கு இடமளிக்கிறது. தவிர, இப்போது நேரிடையாக வாக்காளர்களுக்கு பணம் கொடுக்க முடியுமா என்பது எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. லட்சக்கணக்கான வாக்காளர்கள் இருக்கும்போது, இவர்களுக்கு பணம் கொடுத்து எப்படி ஓட்டை வாங்குவது? ஒன்றிரண்டு பேர்களாக இருந்தால் நடக்கக்கூடிய காரியமாக இருக்கும். பொதுவாக இது நடக்க முடியாத காரியம் என்பதே என்னுடைய கருத்து. அப்படி இருந்தா

லும், வாக்காளர்களைப் பொறுத்த வரையிலே பணம் கொடுக்கும் வழக்கம் குறைவாகத் தான் இருக்கும். குறைவாக ஒரு 10, 12 பேர்களிடத்திலே ஓட்டை வாங்க வேண்டுமென்று சொன்னால், அப்படி வாங்கி விடலாம். ஆகவேதான் இந்த தேர்தல் முறைக்கு இன்டயரக்ட் எலக்ஷன் என்று சொல்கிறார்கள். இன்றைக்கு இருக்கக் கூடிய சூழ்நிலையை யோசித்துப் பார்க்கும்போது, சிறு எண்ணிக்கையுள்ளவர்களால் ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுப்பது என்று சொன்னால், அதிலே ஊழல்கள் வந்துவிடுவதற்கு இடமிருக்கும் என்று எண்ண வேண்டியிருக்கிறது. இப்போது பஞ்சாயத்து தேர்தல் நடக்கிறது, மேயர் தேர்தல் நடக்கிறது என்று சொன்னால், அதிலே இத்தகைய விஷயங்கள் நடைபெறுவதை நாம் பார்க்கின்றோம். இதுவும்கூட நமக்கு ஒரு எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ராஜ்ய சபா தேர்தல் அல்லது மேல்சபை தேர்தல் நடப்பதிலே மக்களிடத்திலே சந்தேகம் ஏற்படக்கூடிய முறையிலே பல நிகழ்ச்சிகள் நடந்தது என்று சொன்னால்கூட ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆனால், இம்மாதிரியான விஷயங்கள் எல்லாம் நடக்கின்றது என்று மக்கள் பேசும்போது, நாம் எல்லோரும் வெட்கப்படும்படியான, தலைகுனியும்படியான ஒரு சூழ்நிலை தான் ஏற்படுகிறது. அப்போது அவர்கள் மத்தியிலே நமக்கு எப்படி மதிப்பு இருக்க முடியும்? நாம் சரியாக தேர்தலிலே நடக்காமல், இங்கு பிரதிநிதிகளாக வந்து இங்கு மட்டும் எழுந்திருந்து அதிகாரிகள் லஞ்சம் வாங்குகிறார்கள் என்று பேசினால் வெளியே உள்ள பொதுமக்கள் என்ன நினைப்பார்கள்? அதிகாரிகளும் நீங்கள் மட்டும் ரொம்ப சரியா என்று கேட்பதற்கு தைரியம் இல்லாவிட்டாலும், கட்டாயம் மனதிற்குள் எண்ணுவார்கள் என்பதிலே சந்தேகமில்லை. மக்களுடைய பிரதிநிதிகளாக வந்து, சட்டசபையிலே பணியாற்றுவோருக்கு பெரும் பொறுப்பு இருக்கிறது. தலைவர்களுக்கு அதைவிட பெரும் பொறுப்பு இருக்கிறது. ஆகவே, இந்த விஷயங்களிலே யெல்லாம் உணர்ச்சி வசப்பட்டு அதிகமாக பிரசாரம் செய்வதைவிட, நம்முடைய வாழ்க்கை முறைக்கு ஒத்தவகையிலே, மற்றவர்களுக்கு வழிகாட்டுகின்ற முறையிலே நடந்துகொள்ள வேண்டும். உண்மையிலேயே, இந்த நல்லெண்ணங்களை வளர்ப்பதற்கு நாம் நல்லமுறையிலே, நல்ல வழிகளை கையாள்வதற்கு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். நாம் எல்லோரும் இங்கு இருக்கக்கூடிய அங்கத்தினர்களும், தலைவர்களும் இன்றைக்கு உறுதியாக ஒரு விரதம் எடுத்துக் கொள்ளுகிறோம் என்ற முறையிலே நாம் தீர்மானம் செய்து கொள்ளுவோமானால், நல்ல ஆரம்பமாக இருக்கும் என்கின்ற கருத்தைத் தான் வலியுறுத்த விரும்புகிறேன்.

அடுத்தபடியாக ஜாதிப் பிரச்னையைப் பற்றி சொன்னார்கள். மற்ற விஷயங்களில் ஒழிந்துவிட்டாலும் கூட, தேர்தல் விஷயத்தில் ஜாதியை பயன்படுத்தக் கூடிய சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். கடைசியாக பார்க்கப்போனால், ஜாதியை பயன்படுத்துவதனால் அதிக நன்மை இல்லை. இப்பொழுது தான் நானும், கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் அவர்களும் பேசிக்கொண்டிருந்தோம். தங்களுடைய ஜாதிக்கு ஆதரவு என்ற ஒரு முறையை ஆரம்பிக்கும்பொழுது, தானாகவே மற்ற ஜாதியினர் எல்லோ

14th December 1961] [Sri C. Subramaniam]

ரும் ஒன்று சேர்ந்து அந்த ஜாதியை எதிர்க்க ஆரம்பிக்கிறூர்கள். அந்த ஒரு சூழ்நிலையைப் பார்க்கிறபொழுது, நல்ல வேளையாக எந்தத் தொகுதியிலும் ஒரு ஜாதி 51 சத விகிதம் இருக்கிறது என்று சொல்ல முடியாது. பார்க்கப்போனல் ஒரு தொகுதியில் ஒரு ஜாதியைச் சேர்ந்தவர்கள் 15 சத விகிதம், 20 சத விகிதம் தான் இருப்பார்கள். ஜாதி அடிப்படையை வைத்து ஜெயித்து விடலாம் என்று சொல்ல முடியாது தேர்தலில். எல்லா மக்களும் நம்பிக்கை பெறக்கூடிய அளவுக்கு நடந்துகொண்டால்தான் வெற்றி பெற முடியுமே தவிர, வேறு முறையில் வெற்றி பெற முடியாது. ஜாதியினல் பலன் கிடைக்குமோ என்று நினைத்துக் கொண்டு, ஜாதி அடிப்படையில் வோட்டு வாங்கி வெற்றி பெற நினைப்பது சரியல்ல. முன்னலே வேண்டுமானல் சில இடங்களில் சில ஜாதிகளுக்கு ஆதிக்கம் இருந்தது என்று சொல்லலாம். அதன் காரணமாக சிறு பகுதி வோட்டுகள் அதிகமாக பெறக் கூடிய வாய்ப்பு இருந்திருக்கலாம். ஆனல் இன்றைய சூழ்நிலை யில் ஒருவர் சொல்லி, மற்றவர் வோட்டுப் போடுவது என்பது நடக் கக்கூடிய காரியம் அல்ல. ஏதோ முக தாட்சண்யத்திற்காக ஒன்றிரண்டு பேர்கள் போடலாம். ஆனல் உள்ளே போகிறவர்கள் வோட்டுப் போடும்பொழுது அவர்களுக்கு யாருக்குப் போட வேண்டுமென்று தோன்றுகிறதோ அவருக்குத்தான் வோட்டுப் போடுவார்கள். ஆகையினல், ஜாதியை உபயோகப்படுத்தி, அதன் மூலம் வெற்றி பெறலாம் என்று நினைப்பது ஓரளவுக்கு நமக்கே கஷ்டம் ஏற்படுத்தும். போகப் போக இந்த சூழ்நிலை மாறிக் கொண்டு வரும் என்று நினைக்கிறேன். ஜாதி அடிப்படையில் எவரும் வெற்றி பெறக்கூடும் என்று எனக்கு நம்பிக்கை இல்லை. ஜாதிப் பிரச்னை ஓரளவுக்கு தேர்தலில் வரலாம். ஆகவே, நாம் இப்பொழுதே ஜாதிப் பிரச்னையை தேர்தலில் வைத்துக்கொள்ளு வதற்கு இடமில்லாமல் செய்வதற்கு எல்லாவிதமான முயற்சிகளை யும் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, இன்றைக்கு நிர்வாகத்தில் இருக்கக்கூடிய ஆளும் கட்சிக்கு உள்ள பொறுப்பைப் பற்றி பல கட்சித் தலைவர் களும் எடுத்துச் சொன்னர்கள். அதை நான் முழுக்க முழுக்க ஒத்துக்கொள்ளுவதற்கு தயாராக இருக்கிறேன். நிர்வாகப் பொறுப்பில் இருக்கிறவர்கள், நிர்வாகத்தில் இருக்கும் காரணமாக மற்றவர்களைவிட அதிகமான வசதிகளை பெறுகிறூர்கள், சலுகைகள் பெறுகிறூர்கள் என்கிற நிலையிலே இருக்கக்கூடாது என்பது என்னு டைய கருத்து மட்டுமல்ல, சர்க்காருடைய கொள்கையும் கூட. அதை அனுசரித்துத்தான், டிசம்பர் 15-ம் தேதியிலிருந்து வெளியே எங்கு போனலும் சர்க்காருடைய கார்களை உபயோகப்படுத்தக் கூடாது, சர்க்கார் செலவிலே சுற்றுப்பிரயாணம் போகக்கூடாது, சர்க்கார் நடத்தக்கூடிய எந்த நிகழ்ச்சிகளிலும் மந்திரிகள் கலந்து கொள்ளக்கூடாது என்று தீர்மானிக்கிறேம். அதற்கு அடுத்த படியாக அதிகாரிகள், மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் போகிற பொழுது கூடப் போகிற அவசியத்தை எதிலும் ஏற்படுத்திக் கொள்ளக்கூடாது. இந்த 2, 2½ மாதங்களுக்கு என்கின்ற முறை யிலே ஒரு அறிக்கையையும் இப்பொழுது வெளியிட்டிருக்கிறேம். அந்த முறையிலே செய்யவேண்டும் என்பதுதான் சர்க்காருடைய

கொள்கை. நான் ஒன்று கட்சித் தலைவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். எந்த சமயத்திலாவது சரி, அவர்களுக்கு ஏதாவது ஒழுங்கு மீறி நடப்பதாகத் தோன்றினால், அதைப்பற்றி உடனடியாக எங்களுக்கு எழுதி அனுப்பலாம், அல்லது நேரிலே வந்து அதைப்பற்றி பேசலாம். ஏதாவது தவறு நடந்திருந்தால் அதைத் திருத்திக் கொள்ளுவதற்கு தயாராக இருக்கிறோம். தவறாக நீங்கள் நினைத்திருந்தால், தவறாக நினைக்கிறீர்கள் என்று உங்களை திருத்துவதற்கும் நாங்கள் தயாராக இருக்கிறோம் என்ற உறுதியை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இது பற்றி யாரும் தயக்கப்பட வேண்டிய அவசியம் இல்லை. நான் கூட நினைக்கிறேன், தேர்தல் முடியும் வரையிலே ஒரு 3, 4 கட்சித் தலைவர்கள் ஒரு சிறு குழுவாக இருந்து 10 நாட்களுக்கு ஒரு முறை கூடி, நமக்கு இருக்கக்கூடிய விஷயங்களை பேசித் தீர்த்துக்கொள்ளலாம், இருக்கக்கூடிய தப்பு அர்த்தங்களை சுலபமாக நீக்கிக்கொள்ளலாம், இதிலே ஏற்படுகிற கஷ்டங்கள், தடைகளைக் கூட சுலபமாக நீக்கிக்கொள்ள முடியும் என்று நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அதைப் பற்றி 20-ம் தேதி கூடும்போது பேசி முடிவு செய்துகொள்ளலாம் என்று நினைக்கிறேன்.

அடுத்தபடியாக, போலீஸ் இலாகா நடந்துகொள்ளுவது பற்றி பல தலைவர்கள் குறிப்பிட்டார்கள். அதிலே போலீஸ்காரர்களுக்கு ஒரு சங்கடமான நிலைமை வேறு இருக்கிறது. அதிலும் தேர்தல் காலத்தில் இதை அனுசரணையாக வைத்துக்கொண்டு, சில சமூக விரோதிகள் கூட, போக்கிரிகளும், காலிகளும் கூட இந்த சூழ்நிலையை பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். ஒரு கட்சியைப் பற்றியும் நான் சொல்லவில்லை, எல்லா கட்சிகளைப்பற்றியும் தான் சொல்லுகிறேன். இவர் நம்முடைய கட்சிக்காக வேலை செய்கிறார் என்ற காரணத்தினால் காங்கிரஸ்காரர்கள் அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கவேண்டும், அதேமாதிரி மற்ற கட்சிக்கு வேலை செய்கிறார், ஆகவே அந்தக் கட்சி அவருக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்ற நிலைமை ஏற்படலாம். அந்த நிலைமையில் சமூகத்தில் கலகம் செய்யக்கூடியவர்கள், சட்ட விரோதமான நடவடிக்கைகளில் ஈடுபடக்கூடியவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கும் பொழுது, இதிலே கூட கொஞ்சம் சந்தேகம் ஏற்படக்கூடிய நிலையில் வந்துவிடுகிறது. அந்த நிலைமையில் புகார் செய்வதற்கு மூன் கட்சித் தலைவர்கள் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும். அதை நன்றாகப் பரிசீலனை செய்து பார்த்து, உண்மையிலேயே தவறாக போலீஸ் நடந்து கொள்ளக்கூடும் என்று அவர்கள் எண்ணுவார்களேயானால், அந்த விஷயத்தைப் பற்றி சர்க்காருக்கு சொன்னால், நாங்களும் அதைப்பற்றி விசாரணை செய்து, உண்மையை கண்டுபிடித்து, அதிலே நடவடிக்கை எடுக்க முடியும். எல்லாக் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கும் சொல்லுகிறோம், என்னுடைய கட்சியைச் சேர்ந்தவர்களுக்கும் சொல்லுகிறேன், தேர்தல் காலத்தில் போக்கிரிகளுக்கும், காலிகளுக்கும் நாம் இடம் கொடுக்கக் கூடிய நிலைமையை வைத்துக்கொள்ளக் கூடாது, குற்றம் செய்கிறவர்களுக்கு ஆதரவு கொடுக்கக்கூடிய நிலைமையை வைத்துக் கொள்ளக்கூடாது என்பதைத் தான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதற்கு இடம் கொடுக்க ஆரம்பித்தால் அது தொடர்ந்து

14th December 1961] [Sri C. Subramaniam]

போய்க்கொண்டே இருக்கும், அதனால் நன்மைகள் விளையாது. குற்றம் செய்பவர்களை பயன்படுத்தி வோட்டுப் பெறலாம் என்பது ஒரு தவறான கருத்து, சாதகமான கருத்து கூட அல்ல என்பதைத் தான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஏதோ ஒரு சில வோட்டுகள் வேண்டுமானால் கிடைக்கலாம். ஆனால், பொதுவாக, இதுமாதிரி இருப்பவர்களுக்கு நாம் எப்படி வோட்டு போடுவது என்று மக்கள் நினைக்கக்கூடிய நிலைமைதான் ஏற்படும். போலீஸ் இலாகா தேர்தல் காலத்தில் ஒரு நல்ல சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும் என்பது ஒருபுறம் இருக்க, குற்றம் செய்பவர்களையும், சமூக விரோதிகளாக இருக்கக்கூடியவர்களையும் இன்றைக்கு ஓரளவு கண்காணிப்பாக வைத்துக்கொண்டிருக்கவேண்டியது அவசியமாக இருக்கிறது. அவ்வாறு நடவடிக்கை எடுக்கும் பொழுது, அது ஒரு கட்சியை பாதிக்கக்கூடாத முறையிலே பார்த்துக்கொள்ளவேண்டியது மிகவும் அவசியமாகிறது. கூடு மானவரையில் நாங்கள் போலீஸ் இலாகாவிற்கு உத்தரவு போட்டிருக்கிறோம். நடவடிக்கை மிகவும் அவசியமாக இருந்தா லொழிய, முடிந்தால் அதை ஒத்திவைத்து பின்னால் நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம் என்று சொல்லியிருக்கிறோம். இப்பொழுது நடவடிக்கை எடுத்து, அதன் காரணமாக ஒரு கட்சிக்கு ஆதரவு கொடுக்கப்படுகிறது, மற்றொரு கட்சிக்கு பாதகம் ஏற்படுகிறது என்று ஒரு சந்தேகம் எழும்படியான நிலைமை வைத்துக்கொள்ளக் கூடாது என்று அதற்கான உத்தரவுகளை நேரடியாக பிறப்பிக்கா விட்டாலும், அதிகாரிகளிடம் இதைப்பற்றிச் சொல்லி, இதுமாதிரி நடவடிக்கை எடுப்பதற்கு உடனே அவசியம் இல்லாத இடங்களில் நடவடிக்கை எடுக்க வேண்டியதில்லை என்பதைப்பற்றி வலியுறுத்தி யிருக்கிறோம்.

அடுத்தபடியாக, கூட்டங்கள் நடத்துவதற்கு அனுமதி கொடுப்பதுபற்றி குறிப்பிட்டார்கள். அதைப்பற்றி தலைவர்கள் கூடிப் பேசி எந்த முறையில் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்யலாம் என் பதை தீர்மானிக்கலாம். ஏதோ ஒரு மைதானத்தை இப்பொழுதே 3 மாதங்களுக்கு ரிசர்வ் செய்துவிட்டதாகச் சொன்னார்கள். அப்படி இருந்தால் அதை 'டி-ரிசர்வ்' செய்து, அந்த மைதானம் எல்லாக் கட்சிகளுக்கும் கிடைக்கும்படி ஏற்பாடு செய்யலாம். அதேமாதிரி மற்ற கட்சிகளைப்பற்றி காங்கிரஸ்காரர்கள் என்னிடம் சொல்லுகிறார்கள். சில பேர்கள் இந்தமாதிரி வேண்டுமென்றே சில இடங்களை ரிசர்வ் பண்ணி அங்கே கூட்டம் போடமுடியாமல் வகை செய்திருக்கிறார்கள் என்று காங்கிரஸ்காரர்கள் மற்ற கட்சிக் காரர்களைப் பற்றி சொல்லுகிறார்கள். இம்மாதிரி குறைகளுக்கு இடம் இல்லாமல் இந்த 2, 2½ மாதத்திற்கு நாம் ஏற்பாடு செய்ய வேண்டியது மிகவும் அவசியம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளு கிறேன்.

வானொலி வாய்ப்பைப் பற்றி அன்பழகன் அவர்கள் குறிப்பிட்டார்கள். எந்தக் கட்சிக்கு எவ்வளவு நேரம் ஒதுக்குவது என்பதைப்பற்றி முடிவு செய்வதற்கு சர்க்கார் பொறுப்பு ஏற்றுக் கொள்ளாமல், எலெக்ஷன் கமிஷன் இதை முடிவு செய்யவேண்டும் என்று அவர்களுக்கு விட்டிருக்கிறோம். அவர்களுடைய முடிவு

நல்ல முடிவாக எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய முடிவாக இருக்கும் என்று நினைக்கிறேன். திராவிட முன்னேற்றக்கழக உபதலைவர் அவர்கள் சொன்ன கருத்துக்களையும் அவர்கள் முன்னால் யோசித்து இருப்பார்கள் என்று நினைக்கிறேன்.

அதற்கு அடுத்தபடியாக, வாக்காளர் பதிவு பற்றி அன்பழகன் அவர்கள் குறிப்பிட்டார்கள். வாக்காளர் பதிவு விஷயத்திலே எல்லா அரசியல் கட்சிகளும் கடைசி நேரத்தில் தான் பார்ப்பதாக இருக்கிறது. மற்ற நேரத்தில் வாக்காளர் பதிவு சரியாக நடந்திருக்கிறதா என்று பார்ப்பதற்கில்லை. தேர்தலுக்கு முன்னால் தான் பார்க்கப்படுகிறது. அதற்காகத்தான் தேர்தலுக்கு முன்னாலே வாக்காளர் பதிவு செய்யவேண்டியிருந்தால் அதற்காக 8 அணா கட்டணம் வைக்கப்பட்டிருக்கிறது. மற்றபடி முன்னாலேயே பதிவு செய்துகொள்வதாயிருந்தால், வெறும் விண்ணப்பம் போட்டு, அதை விசாரணை செய்து பதிவு செய்ய முடியும். ஆனால் தேர்தலுக்கு முன்னால் வாக்காளர்கள் பதிவு செய்யவேண்டுமென்றால், அதற்காக புதியதாக அச்சடிக்கவேண்டியிருக்கிறது, அவசரமாக அச்சடிக்க வேண்டியிருக்கிறது. அதிகச் செலவு ஆவதால் அதற்கு கட்டணம் வாங்கவேண்டியிருக்கிறது. ஆகையினால்தான், தவிர்க்க முடியாத காரணத்தினால் விட்டுப்போனால் மட்டும், அவர்களை இப்பொழுது வாக்காளர் பட்டியலில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னால், அதற்கு ஒரு கட்டணம் வைக்க
11-00 a.m. வேண்டுமென்று வைத்திருக்கிறோம். இன்னொரு கஷ்டமான காரியம் என்னவென்றால், ஒரு ஆயிரம், இரண்டாயிரம் விண்ணப்பங்களைச் சேர்த்துக் கொடுத்து, இதையெல்லாம் சேர்க்கவேண்டும் என்று சொல்கிறார்கள். அது செய்வது கஷ்டமான காரியம். ஆகவே தான் இனிமேல் விண்ணப்பம் கொடுப்பதென்றால், நிபந்தனைக்கு உட்பட்டு கட்டணம் செலுத்த வேண்டும் என்று வைத்திருக்கிறது. இன்னொரு விஷயத்தையும் சொல்ல வேண்டும். வாக்காளர் பதிவில், ப்ளாக் வாரியாகப் பார்த்துச் செய்ய வேண்டும் என்று செய்யப்பட்டது. ஒவ்வொரு வீட்டுக்கும் சென்று பரிசீலனை செய்ய வேண்டியிருந்தது. அதிலே பல அதிசயங்கள் வெளிவந்தன. ஒரு சின்ன வீடு; அதில் இரண்டு பேர்கள் கூட இருக்க முடியாது. ஆனால், அந்த வீட்டில் 100, 200 வோட்டுகள் இருப்பதாகக் கணக்குக் கொடுக்கப்பட்டிருந்தது தெரிந்தது. இம்மாதிரி அதிசயங்கள் வெளிவந்தன. இப்படி ஒரு கட்சிக்காக இம்மாதிரிச் செய்கிறார்கள் என்று புகார்கள் வெளிவந்தன. இவைகளைத் தவிர்க்க வேண்டும். இன்னொன்றையும் கேள்விப்பட்டேன். "இருக்கிற வோட்டர்களை நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள்; இல்லாத வோட்டர்கள் ஜாபிதாவை என்னிடம் கொடுங்கள்; நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று ஒருவர் சொன்னாராம். இம்மாதிரிக் குறைகளையெல்லாம் தவிர்த்து, தேர்தல்கள் நல்ல முறையிலே நடக்க எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும். ஒரு நேரத்திலே இப்படிப் பழகிப் போனால், நிர்வாகத்திற்கு வரும்போது, அந்தப் பழக்கமேதான் தொடர்ந்து வரும். ஆகவே, இந்த கெட்ட பழக்கம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். நல்ல பழக்கம் வருவது கஷ்டம், கெட்ட பழக்கமென்றால் உடனே வந்துவிடும்.

14th December 1961] [Sri C. Subramaniam]

ஒவ்வொன்றிலும் விட்டுக் கொடுக்கும் பழக்கம்தான் பின்னல் வரும். ஆகவே, மற்றவர்களுக்கும், எனக்கும், இம்மாதிரிக் கெட்ட பழக்கங்களைத் தவிர்க்க வேண்டும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். கூடிய அளவுக்கு சட்ட விரோதமான முறைகளையும், நியாயத்திற்கு விரோதமான முறைகளையும் தவிர்க்க, இந்த தேர்தல் நேரத்தில் ஒவ்வொருவரும் ஒரு உறுதியை எடுத்துக்கொள்ளவேண்டும், அதைக் காரியத்தில் நிறைவேற்றவும் முயற்சி செய்ய வேண்டும். மற்றவர்களுக்குச் சொல்வது ஒரு பக்கம் இருக்க, நானும் ஒவ்வொரு கட்சித் தலைவர்களும், அங்கத்தினர்களும், அவரவர்கள் உறுதி செய்துகொள்ள வேண்டும், அந்த உறுதியை நிறை வேற்றப் பாடுபடவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

திறப்பு விழாக்களைப்பற்றிச் சொன்னர்கள். உண்மையாகவே இவை ரொம்ப அதிகமாகி விட்டது நம் நாட்டிலே. அது ஒரு பழக்கமாகி விட்டது. காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் கேட்பது ஒரு பக்கம் இருக்க—அதை ஏற்றுக் கொள்ளத் தயார் இல்லை என்றாலும்—மற்ற கட்சி அங்கத்தினர்கள், "நீங்கள் இந்தத் திறப்பு விழாவுக்கு வரவேண்டும்" என்று வற்புறுத்துகிறார்கள். "கட்டாயம் வந்தாகவேண்டும்" என்கிறார்கள். என்னைப் பொறுத்த வரை, எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் என்னைக் கேட்பது அதிகமாக இருக்கிறது. அதிலும், சில பேர்கள், கட்டடத்தை லட்சக்கணக்கில் பணம் போட்டுக் கட்டிவிட்டு, மந்திரி வந்து திறந்தால்தான் அதை உபயோகப்படுத்த முடியும் என்று மூடிப் போட்டுவிடுகிறார்கள். இதைப் போல விரயம் வேறொன்றும் இல்லை. இதை நான் தேர்தல் காலத்திற்கு மட்டும் சொல்லவில்லை. தேர்தலெல்லாம் தீர்ந்த பிறகு கூட, கட்டடங்கள் கட்டி அவற்றை மூடிவைப்பது சரியல்ல என்பதை எல்லோரும் உணரவேண்டும். அதிலும் சிலர் இந்த மந்திரி வந்து திறந்தால் தான் இந்தப் பள்ளிக் கூடத்தை திறப்போம். அதுவரை ஆறுமாதம் ஆனாலும் சரி, இதை மூடிவைத்து விடுவோம். இன்ன மந்திரி வந்து திறந்தால்தான் இது நடக்கும் என்கிறார்கள். அம்மாதிரியான சூழ்நிலையைத் தவிர்க்க வேண்டும். கட்டடம் கட்டுவதனல், யார் கட்டினர்களோ அந்த எஞ்ஜினியருக்குப் பெருமையாக இருக்கலாம், அங்கே வேலை செய்த கொத்தனுக்குப் பெருமையாக இருக்கலாம், தச்சனுக்குப் பெருமையாக இருக்கலாம். ஆனல், மந்திரி வந்தால் தான் ஆச்சு என்பது சரியாகாது. இது ஒரு வியாதிபோல, தொத்து வியாதி மாதிரிப் பரவி வந்திருக்கிறது. கூடிய அளவில் இதைத் தவிர்க்க வேண்டும். அவசியமான திட்டங்கள் என்றால், மந்திரிகளையோ மற்றவர்களையோ எதிர்பார்ப்பது சரியாக இருக்கலாம். ஆகவே, இந்த மாதிரியான குறைகளைத் தவிர்க்கும் சூழ்நிலையை நாம் எல்லோரும் ஏற்படுத்த வேண்டும். இந்த முறையில்—கட்டடத் திறப்பு, அஸ்திவாரக்கல் நாட்டுவது போன்ற காரியங்களில் மந்திரிகளை எதிர்பார்ப்பது என்பதைத் தவிர்க்க—நமக்குப் பின்னல் வருபவர்கள் ஒரு புதிய மரபுகளை ஏற்படுத்த முயற்சிப்பார்கள் என்று நம்புகிறேன். தனிப்பட்டவர்கள் விஷயத்தில் நடப்பதைக் குறைசொல்ல மாட்டார்கள் என்று நம்புகிறேன். ஆகவே, இந்த மாதம் 15-ம் தேதிக்கு மேல்,

சர்க்கார் விழாக்கள் எதுவும் நடக்காது என்று சொல்ல விரும்பு கிறேன். ஆகவே, அந்த முறையில் தேர்தல் நடைபெறுவது தமிழ் நாட்டுப் பண்புக்கு விளக்கமாக, மற்றவர்களுக்கு வழி காட்டியாக, புதிய ஒரு நாணயமான, நேர்மையான, நியாயமான முறையிலே நடந்து கொள்ளக் கூடியதாக அமைய வேண்டும். அப்பேர்ப்பட்ட முறையில் நடந்து கொள்ள எனக்கும் சக்தி ஏற்படவேண்டும் என்று இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டு, இந்த மானியத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN : On a point of information.** இந்தத் தேர்தல் காலத்தில் சில இடங்களிலே, வோட்டர்களுக்குப் பணத்தையும் கொடுத்து, சோற்றையும் போட்டு, ஒரு வீட்டிலே போட்டு அடைத்து அடிமைகள் போலச் செய்து வோட்டுப் போட முடியாமல் செய்துவிடுகிறார்களே ; அப்படி இருக்கும் நிலைமைப் பற்றித் தகவல் கொடுத்தால், போலீஸ்காரர்கள் அவர்களை வோட்டுப் போடச் செய்ய அந்த அளவு உதவி செய்ய உத்தரவு பிறப்பிப்பார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** தவறு யார் செய்தாலும் அது கவனிக்கப்படும்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 4,00,000 as advance grant for the year 1962–63 under Demand X—Elections."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XI—District Administration and Miscellaneous.*

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,62,00,000 as advance grant for the year 1962–63 under Demand XI—District Administration and Miscellaneous."

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,62,00,000 as advance grant for the year 1962–63 under Demand XI—District Administration and Miscellaneous."

**Sri K. ANBAZHAGAN :** சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, நிர்வாகத் துறையில் தமிழ் நாட்டைப் பொறுத்த வரை, பல பேர் திறம்பட பணியாற்றுகிறார்கள் என்பது உண்மை யாக இருந்தாலும், பொதுவாகவே, மக்களுடைய விழைவுகளும் வேண்டுகோள்களும் அதிகமாகி வருகிற காரணத்தினால், அவை களை நிறைவேற்றக் கூடிய அதிகாரிகள் முழு அளவில், செம்மை யாக, கடமை உணர்ச்சியுடன் நிறைவேற்ற முடியாத காரணத் தினால், ஏற்பட்டுவரும் குறைகள் பல. அப்படி ஏற்படும் குறை களை களைவதில் அமைச்சர் முயற்சிகள் முழு அளவுக்குப் பயன் தரவில்லை என்பதை நான் இந்தக் கடைசி நாளில் நினைவூட்ட வருத்தப்படுகிறேன்.

14th December 1961] [Sri K. Anbazhagan]

முதல் அமைச்சர் திரு. காமராஜ், பாகல்மேட்டில் ஒரு மாநாடு கூட்டி, நிர்வாகத் துறையில் ஏற்பட்டிருக்கிற தாமதத்தை தவிர்க்க, பொதுமக்களிடம் விண்ணப்பங்கள் பெற்று, பெற்ற விண்ணப்பங்களின் அடிப்படையில் எல்லாவற்றையும் நானே நேரிடையாகக் கவனிப்பேன், அதிகாரிகளுக்கு உத்தரவுகள் இடுவேன், குறைகள் நீங்கும் என்று உறுதி மொழி அளித்து இருந்தார். அதற்குப் பின்னால், அதை ஒட்டி இரண்டொரு இடங்களில், மாநாடுகள் நடத்தப்பட்டன. காஞ்சீபுரம் தொகுதியில், ஒரு மாநாட்டை, திராவிட முன்னேற்றக் கட்சித் தலைவர், முதல் அமைச்சரை அழைத்து நடத்தினார்கள். அவர்களும் வந்திருந்தார்கள். பொதுமக்கள் நேரிடையாக வேண்டுகோள்களையும், குறைகளையும் எடுத்துச் சொன்னார்கள். ஆண்டுகள், இரண்டு மூன்று ஆயிற்று. இதுவரை குறைகள் நிவர்த்திக்கப் படவில்லை என்பதுகூட இல்லை, அதற்குப் பின்னால் இங்கே முதல் அமைச்சர், "உங்கள் தொகுதிக்கு பல காரியங்கள் செய்யவேண்டுமென்று என்னிடத்தில் எதிர்பார்த்தீர்கள். ஆனால், நான் ஏமாறவில்லை" என்று சட்ட மன்றத்திலே சொன்னார்கள். இப்படி அமைச்சர் மாநாடு கூட்டி, பொது மக்கள் குறைகளை போக்க நானே முன் வருவேன் என்று தெரிவித்துவிட்டு, அப்படி நிறைவேற்ற வரும் போது, அது, எதிர்க்கட்சித் தொகுதியானால், "நான் ஏமாந்துவிட மாட்டேன்" என்று பேசி இருக்கும் நிலையைப் பார்த்தால், உண்மையிலேயே பல இடங்களில் அதிகாரிகள் எங்கு கட்சி மாறுபாடு ஏற்பட்டிருக்கிறதோ அந்த அடிப்படையை வைத்து, தங்கள் கடமையைச் செய்யத் தவறி இருக்கிறார்கள். அது பொதுவான கருத்து. ஆனால், குறிப்பாக நான் சொல்ல விரும்புவது, சில இடத்தில், சில குறைகள் நடைபெற்று, அதிகாரிகளுக்கு சரியான விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டு, வேண்டுகோள்கள் அனுப்பப்பட்டு இருந்தும் அவைகள் கவனிக்கப் படாமல் இருக்கின்றன. நேற்றைய தினம், திருபெரும்பூதூர் பஞ்சாயத்து தலைவர் நிர்வாகத்தில் குறைகள் பற்றி நான் கேள்வி கேட்டு, அமைச்சர் பதிலும் அளித்தார்கள். அமைச்சர் அளித்த பதிலைப் பார்க்கும்போது கொஞ்சம் வருத்தப் பட நேரிட்டது. ஏனென்றால், குற்றச் சாட்டு தெரிவிக்கப் படாதது போலவும், ஏதோ ஒரு சாதாரண விண்ணப்பம் வந்தாற் போல், விசாரித்தவர்கள், அது சிறு தவறு என்று கருதி, பணத்தை ஒப்படைக்கச் செய்து, அதன் மேலாக எச்சரித்து விட்டார்கள் என்ற கருத்தை அமைச்சர் தெரிவித்தார்கள். ஆனால், நடைபெற்றிருக்கும் நிகழ்ச்சி பற்றி சொன்னால், அதிலே இருக்கும் கொடுமை நன்றாகத் தெரியும். 9—12—1958-ல் பஞ்சாயத்து நடவடிக்கைகளைக்காணச் சென்ற ஒருவரை கழுத்தில் கை கொடுத்து வெளியே தள்ளி இருக்கிறார். அது பற்றி போலீசுக்கு புகார் செய்திருக்கிறார், கலெக்டருக்கும் புகார் செய்திருக்கிறார். அந்த விண்ணப்பங்கள் என்னிடத்தில் இருக்கின்றன. இனிமேல் பார்வையாளர்கள் அனுமதிக்கப்படவேண்டும் என்று கேட்டிருக்கிறார். இதுவரையில், தக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு, அதற்குப் பரிகாரம் தேடப்படவில்லை.

[Sri K. Anbazhagan] [14th December 1961

அடுத்து இந்த பஞ்சாயத்திலே ஒரு பஸ் நிலையம் கட்டுவதற்காக பத்தாயிரம் ரூபாய் அரசாங்கத்திலே நிதி ஒதுக்கப்பட்டு, அந்தக் காரியத்திற்காக செலவழிக்கப்படவேண்டுமென்று "இயர்மார்க்" செய்வதுபோல் அதற்கென அறிவிக்கப்பட்டது. அந்தப் பஞ்சாயத்து தலைவரிடத்தில் அந்த பணத்திற்கான செலான் அளித்திருக்கிறார்கள். அது 1957-ம் ஆண்டில் என்று நான் கருதுகிறேன். அப்படி அளிக்கப்பட்ட செலான் அவர்களால் மாற்றப்பட்டிருக்கிறது. மாற்றியதற்கு பின்னர் அதை வேறு துறையிலே செலவழித்திருக்கிறார்கள். அந்த பஞ்சாயத்துடன் தொடர்பு கொண்டவர்கள் அவர் இந்தக்காரியத்திற்காக செலவழிக்கவில்லை என்று கூறுகிறார்கள்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** சொந்தத்திற்காக செலவழித்தாரா, அல்லது பொதுக் காரியத்திற்காக செலவழித்தாரா?

**SRI K. ANBAZHAGAN :** வேறு பொதுக் காரியத்திற்காக அதிலே பெரும் பகுதியை அவர் செலவழித்ததாக சொன்னது பற்றி இன்னும் ஆடிட் செய்யப்பட்டு அதற்காகத்தான் செலவழிக்கப்பட்டது என்று உறுதி வழங்கப்படவில்லை. வேறு காரியத்திற்கென்று அவர் சொன்ன வாக்குமூலம் தவிர, அங்கே இருக்கிறவர்கள் விண்ணப்பம் போட்டவர்களுக்கு தெரிவிக்கப்படவில்லை. இந்தப் புகார் செய்யப்பட்டு ஏறத்தாழ 2 ஆண்டு காலம் ஆகிறது. இந்த புகார் மீது நடவடிக்கை எடுக்கப்படாமல் இருக்கிற பொழுது, பஸ் நிலையம் இப்பொழுது கட்டி இருக்கிறார் என்று அமைச்சரவர்கள் சொன்னார்கள். மிச்சம் ஏறத்தாழ 287 ரூபாய் இப்பொழுது அளிக்கப்பட்டிருக்கிறது. அதை திருப்பிக் கேட்டிருக்கிறோம் என்று அமைச்சரவர்கள் தெரிவித்தார்கள். நான் தற்செயலாக இன்று காலை திருப்பெரும்பூதூர் வழியே வருகிறபோது பஸ் நிலையம் கட்டினார்களா என்று கேட்டேன். பஸ் நிலையம் கட்டவில்லை, மண் மட்டும் அடித்திருக்கிறார்கள் என்று எனக்கு தெரிவித்தார்கள். அமைச்சரவர்கள் இதை பரிசீலனை செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன். ஒரு வேளை பஸ் நிலையம் கட்டியிருந்தாலும்கூட, நடைபெற்றிருக்கிற தவறு, ஏற்பட்டிருக்கிற நிகழ்ச்சி, இந்த பஸ் நிலையம் கட்டுவதாக சொன்ன பணம் வேறு காரியத்திற்காக பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இதுபோல், வேறு சில பஞ்சாயத்துக்களில் 200, 300, 400 என்று கொடுக்கப்பட்ட பணம் வேறு முறையிலே செலவழிக்கப்பட்டு, அந்த பஞ்சாயத்து தலைவர் நீக்கப்பட்டிருக்கிறார். இது போன்றவற்றிற்கு காரணம் என்னவென்றால், அவர் ஆளும்கட்சி சார்புடையவர் அல்ல, ஆனால் இவர் ஆளும் கட்சி சார்புடையவர் என்று அழுத்தம் திருத்தமாக தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மற்றொன்றும் அமைச்சரவர்கள் மிகவும் எச்சரிக்கையாக பதில் அளித்திருக்கிறார். மூவாயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு வாங்கிய செக்கு பள்ளிக்கூடம் கட்டுவதற்காக வாங்கியது. பள்ளிக்கூட கமிட்டி தலைவர் என்ற முறையிலே வாங்கிய பணம் அது. ஆனால் அதற்கு அமைச்சரவர்கள் பதில் சொல்லும் பொழுது, தனிப்பட்ட

14th December 1961] [Sri K. Anbazhagan]

நடவடிக்கை எடுக்கலாமே தவிர, பஞ்சாயத்து தலைவர் என்ற முறையிலே அவர் மீது நடவடிக்கை எடுக்க முடியாது என்று தெரிவித்தார். ஒரு பஞ்சாயத்து தலைவர் பள்ளிக்கூட கமிட்டி தலைவராக வருகிறார் என்றால் என்ன காரணம்? பஞ்சாயத்து தலைவர் என்ற தகுதியை வைத்துத்தான் அவர் பள்ளிக்கூடக் குழுவுக்கு தலைவராக வருகிறார். பணம் கொடுக்கப்பட்டு ஏறத்தாழ 3, 4 ஆண்டுக் காலம் ஆகிறது. பாங்கிலே கட்டியிருந்தாலும்கூட ஏறத்தாழ 6 சதவிகிதம் வட்டி வரும். அப்படி எவ்வளவு தொகை வரும் என்று கணக்குப்போட்டுப் பார்த்தால் தெரியும். 2—6—1957-ல் அவர் செக் மாற்றியிருக்கிறார். பணத்தைப் பற்றி அதிகாரிகளுக்குத் தெரிவிக்கவில்லை, பஞ்சாயத்துக்கும் அறிவிக்க வில்லை. இந்த மனு வந்ததற்குப்பின்னர்தான் வாங்கியிருக்கும் பணத்தை அவர் ஒப்புக்கொண்டார். இப்படி ஒரு தவறு செய்தவர் பஞ்சாயத்து தலைவராக இருக்க வேண்டும், அப்படி இருப்பவரை நீக்குவது என்பது முறையற்ற காரியம் என்று பேசுவதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை. 1955-56-ல் இந்தத் தகராறு ஏற்பட்டிருக்கிறது. ரூ. 3,500 பணம் தவறாக செலவழிக்கப்பட்டிருக்கிறது என்று குறிப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. 1955-56-ல் இருந்து தவறு செய்திருக்கிறவர் தொடர்ந்து தவறு செய்கிறார்.

இதைவிட வேடிக்கை என்னவென்றால் நான் குறிப்பிடும் தேதியிலே சற்று தவறியிருக்கலாம். 87,000 ரூபாய் குடிதண்ணீர் பைப்பு காண்டிராக்டுக்காக தலைவர் தாமே மேற்கொண்டு, நடத்துவதாக ஒப்புக்கொண்டு காண்டிராக்டு எடுத்தார். 87,000 ரூபாய்க்கு வேண்டிய சாமான்களையெல்லாம் ஒரு வியாபாரியிடத்தில் பெற்றார். அப்படி பெற்றபொழுது, பஞ்சாயத்து தலைவர் என்ற முறையிலே அந்தப் பொருள்களை பெற்றிருக்கிற அவருக்கு அளிக்கப்படவேண்டிய பாக்கித்தொகை ஏறத்தாழ ரூ. 20,000 இருக்கிறது. இவர் பணத்தை செலவழித்து விட்டார். 87,000 ரூபாய் காண்டிராக்ட் பணத்தையும் பெற்றுக் கொண்டு விட்டார். செலவழித்ததிலே 20,000 ரூபாய் பாக்கி வருகிறது. அந்த முதலாளிக்கோ அல்லது பொருள்கள் அனுப்பியவர்களுக்கோ அந்தப் பணத்தை தரவேண்டுமே தவிர இப்பொழுது பஞ்சாயத்து தலைவர் அந்த பணத்தை அனுப்ப வேண்டுமென்று கேட்டிருக்கிறார். தலைவர் பொறுப்பிலே இருக்கிறவர் அனுப்ப முடியாத காரணத்தினாலே, பஞ்சாயத்து தலைவர் செலவழித்த காரணத்தினாலே, அங்கே நிர்வாக அதிகாரியாக இருப்பவர் இந்தப் பொறுப்புக்கு ஆளாக்கப்படுகிறார். இடையிலே சில அதிகாரிகள் பஞ்சாயத்திலே தீர்மானம் போட்டு அந்த பணத்தை கட்டுவதற்கு இசைந்துவிடுங்கள் என்று தெரிவித்திருக்கிறார்கள். இதிலே ஒரு பெரிய மோசடி நடந்திருக்கிறது என்று அந்த வட்டார மக்கள் சொல்லுகிறார்கள். ரூபாய் 87,000-க்கு காண்டிராக்ட் எடுத்து, கொடுக்க வேண்டிய பணத்தை கொடுக்காமல் பாக்கி வைத்து, பெறவேண்டிய பணத்தை பெற்றிருப்பவர், இப்படிப்பட்ட ஒரு தவறை செய்திருக்கிறவர் பஞ்சாயத்து தலைவராக இருக்க வேண்டுமா? அதே நேரத்தில் அரந்தாங்கி வட்டாரத்தில் ஏறத்

தாழ 30 அல்லது 40 பஞ்சாயத்து தலைவர்கள் மீது அவர்கள் எல்லாம் 200 அல்லது 300 ரூபாய் ரோடு போடுவதற்கு பஞ்சாயத்தின் அனுமதியில்லாமல் செலவழித்து விட்டார்கள், என்ற குற்றச்சாட்டு வந்தது. அப்படிப்பட்ட 30 தலைவரிலே ஒரே ஒரு தலைவர் மட்டும் நடவடிக்கைக்கு உள்ளானர். அப்படி நடவடிக்கைக்கு உள்ளான தலைவர்—நான் கருதுகிறேன் —முடச்சிக்காடு இ. ரா. கோவிந்தன். அவர் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர். அவர் செய்த தவறு என்னவென்ருல் அனுமதி பெருமல் ரோடு போட பணம் செலவழித்தார் என்பது. அவரை விலக்கி வைக்கவேண்டுமென்று சொன்னுர்கள். கலெக்டர் ஆபீஸிலிருந்து அந்த உத்தரவு வந்தது. அதற்கு பிறகு அவர் மேலதிகாரிகளுக்கு விண்ணப்பம் செய்து கொண்டார். அப்படி விண்ணப்பம் செய்து கொண்டவர் வீரயம்கோட்டை பஞ்சாயத்துத் தலைவர் திரு. எம். ஆர் கோவிந்தன். அவரது மற்ருெரு பெயரே எம். ஆர். கோவேந்தன். அவருக்கு மேலிடத்திலிருந்து உத்தரவு அனுப்பப்பட்டிருந்தது. அதனுடைய நகல் கலெக்டருக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. அதிலே, உங்களுக்குத் தேவையான உத்தரவு கலெக்டரிடத்தில் இருக்கிறது என்று சொல்லியிருக்கிருர்கள். அந்த உத்தரவில் அவரைப் பதவியிலிருந்து நீக்குவதற்கு காரணம் இல்லை என்று தெரிவித்திருப்பதாகக் கேள்விப்படுகிறேன். இரண்டு மாத காலமாகியும் இதுவரை அவருக்கு அந்த உத்தரவு போய்ச் சேரவில்லை. இன்ன தேதியில உத்தரவை அனுப்பிவிட்டோம் என்று மேலதிகாரிகள் தெரிவித்திருக்கிருர்கள். கலெக்டர் அலுவலகத்திலேயே இருக்கிறது. பதவியிலிருந்து விலக்கப்பட்டவர் மறுபடியும் பதவியில் உட்காரக்கூடிய காரணத்தினுல் அந்த உத்தரவு அவருக்கு செல்லாமல் அதை இரண்டு மாத காலமாக இடையிலே மாற்றுக் கட்சியினர் தடுத்து நிறுத்தியிருக்கிருர்கள். இதுதான் கலெக்டருடைய வேலையா? கலெக்டர் அலுவலகத்திலே இரண்டு மாத காலம் நிறுத்தி வைக்கிருர்களே என்ருல் எதிர்க் கட்சியைச் சார்ந்த ஒருவரை மட்டும் விலக்கிவிட்டு மற்ற 29 பஞ்சாயத்து தலைவர்களையும் வேறு முறையிலே நடத்தியிருக்கிருர்கள். எல்லோரும் ரோடு போடுவது என்று சொன்னுல் போதுமான பணம் முன்கூட்டியே அனுமதி கிடைக்காவிட்டாலும்கூட பொதுமக்களுக்கு சில ஆசை வார்த்தைகள் சொல்லி ஆளுக்கு ஒரு ௰ வாங்கிக் கொடுத்து, அந்த வட்டாரத்திலே ரோடு போடச் செய்தார். அப்படி ரோடு போடச் செய்தவரை பதவியை விட்டு நீக்குவதற்கு இந்த முறை கையாளப்படுகிறது என்ருல் அது மாவட்ட நிர்வாகத்திலுள்ள குறை மட்டுமல்ல, பஞ்சாயத்து எப்படி பாரபட்சம் காட்டுகிறது என்பதற்காகவும் சொல்லுகிறேன்.

அதேபோல் அடுத்து நான் தெரிவிக்க விரும்புவது என்ன வென்ருல் செங்கற்பட்டு மாவட்டத்திலே ஒரு கிராமத்திலே அங்கேயுள்ள கிராம கர்ணம் வழக்கமாக இருக்கிற பட்டாக் கணக்கை மறைத்திருக்கிருர். மதுராந்தகம் தாலுகாவிலுள்ள நெற்குணம்

14th December 1961] [Sri K. Anbazhagan]

என்ற ஊர் என்று கருதுகிறேன். அப்படி மறைத்ததற்குப் பின்னர் பல மனுக்கள் போட்டு வேறொறு கணக்கை எழுதிவைத்து இருந்ததை முன்னால் இருந்த கலெக்டர் அந்தக் கணக்கை வாங்கி அதைப் பதிவு செய்ய வைத்து, அது தவறான கணக்கு என்றும் தெரிவித்திருக்கிறார். உண்மையான கணக்கை கண்டுபிடிக்காமல் புதிய கணக்கை நடைமுறையில் வைத்துக் கொண்டு அந்த ஊர் மக்கள் பல தொல்லைகளுக்கு ஆளாகிறார்கள். அங்கே இருக்கிற ஆதித் திராவிட மக்களும், சிறு நிலச்சுவான்தார்களும் பெரும் தொல்லைக்கு ஆளாக்கப்படுகிறார்கள். செங்கற்பட்டு கலெக்டருக்கு மனு கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் அங்குள்ளவர்களிடம் தொடர்பு வைத்துக் கொண்டு அடிக்கடி அங்கேயுள்ள அதிகாரிகளிடம் தலையிட்டு பல தொல்லைகளை தருகிறார்கள். அங்கிருக்கும் மக்களில் ஏழையாக இருக்கிறவர்களின் நிலத்தை கொஞ்சம் வசதி படைத்தவர்கள் வளைத்துக் கொண்டு அவர்கள் நிலத்திற்கு தண்ணீர் பாயாதபடி தடுத்திருக்கிறார்கள். ஒன்று அல்லது இரண்டு ஆண்டு காலமாக தொடர்ந்து போராட்டம் நடக்கிறது. மனுக்கு மேல் மனு போடுகிறார்கள். ஆனால் அதிகாரிகள் அதை கவனிக்கவில்லை. ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் இதிலே தலையிடுகிறார்கள், குற்றத்தை உண்டாக்குகிறார்கள், தவறு செய்ய வைக்கிறார்கள், பாதுகாப்பு தேடுகிறார்கள். இந்த முறையை மாற்றுவதற்காக, இன்று கடைசி நாளாக இருந்தாலும், மாவட்ட நிர்வாகம் என்ற மான்யக் கோரிக்கையை எடுத்துக் கொண்ட காரணத்தினால் இந்தக் குறையை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இதுபோன்ற மற்றொரு குறை என்னவென்றால் திண்ணனூர் பஞ்சாயத்து தலைவர் அந்த பஞ்சாயத்துக்கு ஒரு சின்ன வாசக சாலை கட்டுவதற்காக ரூபாய் 600 அல்லது ரூபாய் 700 பெறுமானமுள்ள சுவறுக்கு தேவையான கற்கள், வாசற்படி, கதவுக்கு தேவையான மரங்கள் இவைகளை ஒருவர் அளித்திருக்கிறார். அவற்றை அந்த பஞ்சாயத்து தலைவர் பெற்றுக் கொண்டார். பஞ்சாயத்துதான் கட்டுகிறது என்று சொல்லிவிட்டு அதன் வரவு செலவை தானே அனுபவித்துக்கொண்டிருக்கிறார். இப்படிப்பட்ட பஞ்சாயத்து தலைவர் இருக்கிற திருப்பெரும்பூதூர் பஞ்சாயத்து மிகவும் செம்மையாக பாதுகாக்கப்படுகிறது. ஆதரவு தரப்படுகிறது. அதிகாரிகளும் மிரட்டி கேட்பதற்குக்கூட வழியில்லாமல் தடுக்கப்படுகிறார்கள். இப்படிப்பட்ட முறையிலே அதிகாரிகள் நடந்து கொள்வதை தடுப்பதற்கு நிதி அமைச்சர் அவர்கள் ஏதேனும் வழி காண்பார்கள், அவர்களுக்கு எச்சரிக்கை அளிப்பார்கள் என்று எதிர்பார்த்து என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

* **Sri R. SRINIVASA IYER :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஜில்லா அட்மினிஸ்ட்ரேஷன் சம்பந்தமாகவுள்ள இந்த மானிய கோரிக்கையைப்பற்றி இதற்கு ஆதரவாகப் பேசும் முறையில் சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். ஜில்லா

அட்மினிஸ்ட்ரேஷன் சம்பந்தமாக ஏற்பட்ட இந்த மானிய கோரிக்கையின் மீது விவாதிக்கும் தறுவாயில் ஒரு சில விஷயங் களைப்பற்றி விவாதிக்கும்போது அது சம்பந்தமாக உண்மை விஷ யங்களை நன்ருக அறிந்து கொண்டு பேசாமல் பொதுவாக பேசி அதை பயன்படுத்திக்கொள்ள முற்படுவது சரியான முறையல்ல என்று நான் எண்ணுகிறேன். முக்கியமாக அபிவிருத்தி வேலை கள் இப்பொழுது அநேகம் ஏற்பட்டிருக்கின்றன. அபிவிருத்தி வேலைகளுக்கு தலைவராக இருக்கக்கூடியவர்கள் அந்தந்த ஜில்லா கலக்டர்கள் அவர்களுடைய வேலைகளைக் குறைப்பதற்கு டிஸ்ட்ரிக்ட் ரெவின்யூ ஆபீசர்களும் அவர்களுக்கு வேண்டிய சிப்பந்திகளையும் நியமித்து திட்டங்களை நிறைவேற்றுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறோம். இப்படி அவர்களை அபிவிருத்தி வேலைகளுக்குப் போட்டும் அவர்கள் சரிவர பணியாற்ருமல் இருந் திருந்தால் நம்முடைய திட்ட வேலைகள் எல்லாம் இவ்வளவு அழகாகவும் நல்ல முறையிலும் நிறைவேறி இருக்க முடியாது. குறிப்பாக அவர்கள் டார்ஜெட்டுக்கு மேல் ஜாஸ்தி செலவு செய்யாமல் திட்டங்களை நல்ல முறையில் நிறைவேற்றி இருக்க முடியாது. வெளி நாட்டிலிருந்து வந்தவர்கள் கூட சென்னை ராஜ்யத்தில் ஏற்பட்டிருக்கக்கூடிய அபிவிருத்தி வேலைகளைக் கண்டு புகழக்கூடிய அளவில் அவர்கள் வேலை செய்திருக்கிருர்கள். தஞ்சை ஜில்லாவைப் பொறுத்த வரைக்கும் மேல் தஞ்சை, கீழ் தஞ்சை, என்று இரண்டு அபிவிருத்தி டிஸ்ட்ரிக்ட்களாகப் பிரித்து அபிவிருத்தி வேலைகள் நடைபெற்றிருக்கின்றன. அவற்றிற்கு தலைவராக இருந்த கலெக்டர் அப்பொழுது இருந்த கலெக்டரும் சரி இப்பொழுது இருக்கக்கூடிய கலெக்டரும் சரி நல்ல முறையில்தான் பணியாற்றி இருக்கிருர்கள். அவர்கள் அங்குள்ள பிரதிநிதிகளுடன் எவ்வளவோ ஒத்துழைத்து பல திட்டங்களை நிறைவேற்றியிருக்கிருர்கள் அவற்றில் ஒரு குறைபாட்டை, பஞ்சாயத்து சம்பந்தமாக கனம் அன்பழகன் அவர்கள் சில குற்றச்சாட்டுகளை சாட்டினர். சில வற்றை சரியாக ஆராயாமலும் உண்மையை விரிவாகச் சொல்லா லாமல் குற்றம் சாட்டியிருக்கிருர் என்பதுதான் என்னுடைய கருத்து. விரியங்கோட்டை பஞ்சாயத்து தலைவர் சம்பந்தமாக ஜில்லா கலெக்டர் செய்ததைப்பற்றிதான் அவர் மீது குற்றம் சாட்டியிருக்கிருர் என்று நினைக்கிறேன். நான் அந்தப் பகுதியி லிருந்து வருவதால் அதன் விவரம் பூராவும் எனக்கு நன்ருகத் தெரியும். பி.டபிள்யூ.டி. (P.W.D.) சம்பந்தமாக ஒரு வாய்க் கால் இரு பக்கங்களிலும் பி.டபிள்யூ. டிபார்ட்மெண்டார் அவர்க ளால் தாக்குகள் வெட்டப்பட்டன. அந்த வாய்க்காலில் செய்த மரா மத்தையே பஞ்சாயத்துக்களுக்காக செய்யப்பட்டது போல் கணக்கு எழுதிப் பணம் பஞ்சாயத்து நிதியிலிருந்து செலவழித் திருப்பதாகச் சொல்லப்பட்டது. பஞ்சாயத்து எக்ஸ்டென்ஷன் ஆபீஸர் கணக்குக் கொடு என்று கேட்டதற்கு அந்தப் பஞ்சாயத்துத் தலைவர் அப்படிக் கணக்குக் கொடுக்க முடியாது, கணக்குக் கொடுக்க சட்டம் கிடையாது. நீர்

14th December 1961] [Sri R. Srinivasa Iyer]

யார் கணக்குக் கேட்பது என்று கேட்டதாகவும் அதனுல் அவர் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்ட தாகவும் சொல்லப்படுகிறது. இதுதான் குற்றச்சாட்டு என்று நினைக்கிறேன். இதைப்பற்றி ஜில்லா கலெக்டரும் ரீஜனல் இன்ஸ்பெக்டர் அவர்களும் தீர விசாரித்து மேற்படி பஞ்சாயத்து தலைவரை பதவியை விட்டு நீக்கி உத்தரவு போட்டு அவருக்கு நகலும் கொடுத்தாய் விட்டது. பிறகு பஞ்சாயத்து புதியச் சட்டம் 2—10—1961 முதற்கொண்டு அமுலுக்கு வந்திருக்கிறது. அதன் படிக்கு மேற்படி உத்தரவு கெஜட்டில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. பிரசுரம் எப்பொழுது ஏற்பட வேண்டும் என்பது இல்லை. புதுச் சட்டம் 2—10—1961-லிருந்து தான் அமுலுக்கு வந்தது. அதிலும் கெஜட் பிரசுரம் செய்த தேதி முதல்தான் ஆர்டருக்கு வரும் என்று இல்லை. இந்தச் சட்டம் அமுலுக்கு வருவதற்குள் அந்தத் தலைவருக்கு பதவி காலம் முடிந்து விடுகிறது. இதைப்பற்றி சட்ட அபிப்பிராயமும் மாறுபட்டதாக இருக்கிறது. புதுச் சட்டப்படி கலெக்டர் நேரிடையாக தலைவரை விலக்க முடியாது. அப்படி யிருந்தாலும் கையாடல் நடந்தாலும் அதை பஞ்சாயத்துக்குத் தான் தெரிவிக்கலாம். கலெக்டர் ஒன்றும் செய்வதற்கு இல்லை. ஆகவே கலெக்டர் பேரில் குற்றம் சாட்டுவது சரியல்ல என்று நினைக்கிறேன். புதுச் சட்டத்தில் இப்படிக் கணக்கு கொடுக்க முடியாது என்று சொல்லக் கூடிய அளவில் சில விதிகள் இருப்ப தால்தான் அதை மாற்றி அமைக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது.

அதே நேரத்தில் அபிவிருத்தி வேலைகள் சம்பந்தப்பட்ட மட்டில் தலைமை அதிகாரிகளும் மற்ற எல்லா டிபார்ட்மெண்டும் ஒத்துழைத் தால் மக்களுக்கு நல்ல முறையில் பணியாற்றி வரலாம். அதற் காகத்தான் இப்பொழுது ஜில்லாக்களை பிரிவினை செய்து டிஸ்டிரிக்ட் ரெவின்யூ ஆபீசர்களையும் மற்றும் சிப்பந்திகளையும் போட்டு வேலை நடந்து வருகிறது. அதற்கு வேண்டிய சிப்பந்தி களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அந்த முறையில் ஏராள மான சிப்பந்திகளும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அந்த முறை யில் பல வேலைகள் நடந்து வருகின்றன. இந்த முறையில் பஞ்சா யத்துக்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதையெல்லாம் நமது சீப் செக்ரடரி அவர்கள் கருத்தரங்குகளை அமைத்து பிள்ளை களுக்கு பாடம் சொல்லிக் கொடுப்பது போன்று சொல்லிக் கொடுத்துக்கொண்டு வருகிறார். எந்த விதத்தில் பொது மக்களுக்கு சேவை செய்ய வேண்டும் என்றும் சொல்லிக்கொடுத்துக்கொண்டு வருகிறார். அந்த நிலைமையில் கொடுக்கக்கூடிய பணத்தை நல்ல முறையில் செலவு செய்யாமல் இருந்தால் அது மக்களுக்கு சேவை செய்வதாக ஆகாது. அதிகாரிகளும் சிப்பந்திகளும் நல்ல முறை யில் பணியாற்ற வேண்டும். அதற்குத்தான் அவர்களுக்கு வேண்டிய அதிகாரத்தையும் கொடுத்திருக்கிறார்கள். நல்ல முறை யில் கிராம ராஜ்யம் ஏற்பட வேண்டும் என்ற அளவில் எவற்றை யெல்லாம் செய்ய வேண்டுமோ அவற்றையெல்லாம் செய்து கொண்டு வருகிறார்கள். அதனுல் அபிவிருத்தி வேலைகள் நல்ல

[Sri R. Srinivasa Iyer] [14th December 1961

முறையில் செயல்பட வேண்டுமானல் எல்லோரும் அதற்கு ஒத்துழைக்க வேண்டும். இந்தச் சட்டம் இந்த மன்றத்தில் பரிசீலனைக்கு வந்தபோது செலக்ட் கமிட்டிக்குப் போகவில்லை. அதன்படி யாராவது தலைவர் பணத்தைக் கையாடல் செய்தால் அவரை நீக்கவேண்டுமானல் அவரைப்பற்றி பஞ்சாயத்துக்களுக்கு அனுப்ப வேண்டும் என்றும் அங்கு மெஜாரிட்டி அங்கத்தினர்கள் அவர் மீது குற்றம் இல்லை என்று சொல்லிவிட்டால் அந்தத் தலைவரை எந்த விதத்திலும் நீக்க முடியாது என்ற அளவில் இருக்கிறது. இப்படி இருப்பதால் ஐந்து வருஷத்திற்கு என்ன கையாடல் செய்தாலும் அவரை நீக்கவே முடியாது என்ற நிலைமையில் இருக்கிறது. அவர் சாப்பிட்டுக்கொண்டே இருக்கலாம். இந்த முறையில் விதி அமைக்கப்பட்டிருக்கிறது என்பதை இங்கே குறிப்பிட ஆசைப்படுகிறேன்.

இன்னொரு முக்கியமான பெரிய விஷயம். எவ்வளவோ அதிகாரிகள் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு இருந்தாலும் இன்னும் கொஞ்சம் துரிதமாக அவர்கள் வேலை செய்ய வேண்டும். அவரவர்கள் அனுப்பவேண்டிய ரிபோர்டுகளை அவ்வப்போது அனுப்பினல் இன்னும் எவ்வளவோ துரிதமாக வேலைகள் நடைபெறும். உதாரணமாக மைனர் இரிகேஷன் வேலைகள் இருக்கின்றன. சிறிய வேலைகள் அதாவது குளங்கள் மாராமத்து முதலியவைகள் இருக்கின்றன. இவைகளைச் செய்ய வேண்டுமானல் பி.டிபிள்யூ.டி. யின் திட்ட எஸ்டிமேட்டுகளுடன் கலெக்டரிடமிருந்து ரிபோர்ட்டுகள் வர வேண்டியதாக இருக்கிறது. திட்டங்களை முதலில் ரெவின்யூ போர்டுக்கு அனுப்புகிறார்கள். அதற்குப் பிறகு அது கலெக்டர் ஆர்.டி.ஓ. மூலம் தாசில்தாருக்குப் போய் பரிசீலனை செய்யப்பட்டு உணவு உற்பத்தி ரெவின்யூ வருவாய் முதலியதுபற்றி மறுபடியும் வருகிறது. அப்படி இல்லாமல் பி.டபிள்யூ.டி. எஸ்டிமேட்டுடன் கலெக்டர் ரிபோர்ட்டையும் சேர்த்து அனுப்பி விட்டால் எவ்வளவோ துரிதமாக வேலைகள் நடைபெறும். சாதாரணமாக 50 அல்லது 60 ஆயிரம் ரூபாயில் முடிக்கக்கூடிய திட்டங்களை உடனடியாக எடுத்து முடித்து விட்டால் நலமாக இருக்கும். அப்படி பல திட்டங்கள் தாமதமாக வருவதால் திட்டங்கள் சாங்ஷன் ஆகவில்லை என்று நிறைவேற்றப்படாமல் நின்று விடுகின்றன. அதனல் ஒரே சமயத்தில் ரிபோர்ட்டையும் சேர்த்து அனுப்பிக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும். அப்படி அனுப்பினல்தான் அந்த வருஷத்திலேயே மக்கள் அதன் பலனை அனுபவிக்க முடியும். மக்கள் கேட்டவுடனேயே நிறைவேற்றிக்கொடுத்தால் அவர்கள் எவ்வளவோ சந்தோஷப்படுவார்கள். உதாரணமாக என் தொகுதியில் வில்லுணியாற்றின் குறுக்கே அணை கட்டும் ஒரு திட்டத்தை எடுத்து நடத்த வேண்டும் என்று மக்கள் கேட்டார்கள். அதற்கு 60 ஆயிரம் ரூபாய் ஆகும் என்று திட்டம் போட்டார்கள். அந்தத் திட்டம் உடனே பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு முடிக்கப் பட்டும் விட்டது. உடனே பலனடைந்து எழு குளங்கள் நிரம்பி அதைக்கண்டு மக்கள் எவ்வளவோ சந்தோஷப்பட்டார்கள். இப்படியே எல்லா மைனர் திட்டங்களையும் எடுத்து நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பெரிய திட்டங்களை

14th December 1961] [Sri R. Srinivasa Iyer]

அதாவது கோடிக் கணக்கில் செலவாகக்கூடிய திட்டங்களை பின்னுடி பார்த்துக்கொள்ளலாம். மக்கள் சொல்லக்கூடிய அந்தந்த தொகுதி பிரதிநிதிகள் சொல்லக்கூடிய சிறிய திட்டங்களை அவர்கள் சொல்லும்போது எடுத்து நிறைவேற்றினுல் அவர்களுக்கு எவ்வளவோ சௌகர்யமாக இருக்கும். அவர்களும் சந்தோஷப் படுவார்கள். ஆகவே சிப்பந்திகளை துரிதமாக வேலை செய்யச் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். பல பைல்கள் வருவதற்கு காலதாமதமாகின்றன. இதைப்பற்றி கனம் உள் துறை அமைச்சர் அவர்கள்கூட மேல் சபையில் பட்ஜெட்டை சமர்ப்பிக்கும்போது குறிப்பிட்டிருக்கிறுர்கள். இதைப்பற்றி பரிசீலனை செய்து வருவதாகவும் சொல்லி இருக்கிறுர்கள். இது ரொம்பவும் வரவேற்கத்தக்க விஷயம். இதைப்பற்றி அந்தந்த இலாகாவிலுள்ள க்ளார்க்குகளைக் கேட்டால் அவர்கள் என்ன சொல்லுகிறுர்கள் என்றுல் பதினைந்து நாட்கள் வரையில் பைல்களை வைத்துக்கொள்ளலாம் என்று விதி இருப்பதாகச் சொல்லு கிறுர்கள். அப்படிச் சொல்லுவது சரியல்ல. பைல்களை உடனுக்குடன் அனுப்பவேண்டும்.

அடுத்தபடியாக பே கமிஷன் ரிபோர்ட் வந்து சிப்பந்திகளுக்கு அதிகப்படியான சம்பளமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன் மூலம் அதிகப்படியாக ஐந்து கோடி ரூபாய் கூட செலவாகி வருகிறது. இருந்த போதிலும் என். ஜி. ஓக்கள் திருப்தி அடைந் தார்களா என்றுல் திருப்தி அடைந்ததாகத் தெரியவில்லை. இன்னும் ஜாஸ்தி வேண்டும் என்ற எண்ணத்தில் இருப்பதாகத் தெரிய வருகிறது. அதாவது மனக்குறை இருப்பதாகத் தெரிய வருகிறது. எல். டி. சி. எல்லாம் யு.டி.சி. களாக ஆனவுடன் அவர்கள் எல்லோரும் சூப்ரன்டென்டென்டாக ஆகவேண்டும் என்ற எண்ணங்கொண்டிருக்கிறுர்களே தவிர பெரும்பாலோர் வேலையை ஊக்கமாக செய்வதில்லை. இப்பொழுது 10½ மணிக்கு வருகிறுர்கள். அப்படி அவர்கள் 10½ மணிக்கு வந்தாலும் ஏன் 11 மணிக்கு ஆபீசுக்கு வரக்கூடாது என்று நினைக்கிறுர்கள். அப்படி அவர்கள் 10½ மணிக்கு வந்தாலும் அவர்கள் உடனே வேலை செய்வதாக இல்லை. அவர்கள் வாங்கக்கூடிய சம்பளத்துக்கு வேண்டிய பணி செய்ய வேண்டுமே என்று அவர்கள் நினைப்பது இல்லை. 10½ மணிக்கு வருகிறுேமே ஏன் 11 மணிக்கு வரும்படி யாகக் கேட்கக்கூடாது என்ற அளவில்தான் அவர்கள் பேசிக் கொண்டிருக்கிறுர்கள். வெளியே போகும் வரையில் இருந்த இடத்தில் இருந்து கொண்டிருந்தாலும் ஏதாவது ஒரு பைலை யாவது புரட்டுவதற்கு மனம் தோன்றும். அப்படியும் இல்லாமல் அவர்கள் வெளியே போய் விடுகிறுர்கள். அப்படி இருந்தால் எப்படி வேலை செய்யத் தோன்றும்? குறை சொல்லத்தான் தோன்றும். இந்த மனப்பான்மை இருக்கவே கூடாது என்பதை இந்த இடத்தில் சொல்லுகிறேன். இதை ஒரு எச்சரிக்கையாக கீழ் சிப்பந்திகளுக்கும் தலைமை அதிகாரிகளுக்கும் ஸ்தாபன அதி காரிகளுக்கும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த மனப் 11-3 a.

பான்மை இருக்கக்கூடாது என்பதையும் சொல்லிக்கொள்ளு கிறேன்.

[Sri R. Srinivasa Iyer] [14th December 1961

இந்த மனப்பான்மைக்கு ஒரு காரணமும் உண்டு. பாக்வேர்ட் கம்யூனிட்டீஸ், மோஸ்ட் பாக்வேர்ட் கம்யூனிட்டிஸ் இவர்களுக்குச் சலுகைகளை அனைத்தும் கொடுக்க வேண்டியது தான். இருந்தாலும் மற்ற விஷயங்களிலே, ப்ரொமோஷன் கொடுப்பதில் செலெக்ஷன் க்ரேட் கொடுப்பதில் ரிடையர் ஆனவருக்கு ரி-எம்ப்ளாய்மென்ட் கொடுப்பதில் கீழே இருக்கிறவர்களுக்கு பல மனக் குறைகள் ஏற்பட்டு அவர்கள் உற்சாகத்துடன் வேலை செய்ய முடியாத நிலைமை ஏற்படுகிறது. இவைகளில் இண்டர்பியர் செய்யாமல் சீனியாரிட்டி மெரிட் என்பவைகளை நிதரிசனமாக அனுசரித்து அவர்களுக்கு அப்போதைக்கப்போது சேர வேண்டிய இன்க்ரிமென்ட் ப்ரொமோஷன் இவைகளைக் கொடுத்து வந்தால் அவர்களுக்கு அந்த மனக்குறைவு, உற்சாகக் குறைவு ஏற்படாமல் நன்றாகப் பணியாற்றுவார்கள் என்று நான் நினைக்கிறேன். தற்காலம் இருக்கும் நிலைமையில் யாராயிருந்தாலும், ஊதியம் ஜாஸ்தி வேண்டுமென்று கேட்பதைத் தவிர அதிக வேலை செய்யவேண்டும் அதிக உற்பத்தி செய்யவேண்டும் என்ற மனப்பான்மை, கூலி ஆள் வேலை செய்கிறவர்களிலிருந்து மேல் பதவி வரையில் இல்லை. நம் நாடு முன்னேறுவதற்கு இத்தகைய மனப்பான்மை மாறவேண்டுமென்று கூறிக்கொண்டு இந்த மானியக் கோரிக்கையை நான் ஆதரித்து என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஜில்லா அட்மினிஸ்ட்ரேஷனைப் பொறுத்த வரையில், முக்கியமாக பேப்பர்கள் அதிகமாக 'டிலே' ஆகின்றன. கீழ்த் தரத்திலே, தாலுகா ஆபிஸ்களிலே, டிபுடி தாசில்தார் ஆபிஸ்களிலே, சப்-கலெக்டர் ஆபிஸ்களிலே, கலெக்டர் ஆபிஸ்களிலே இன்னும் மற்ற இலாகாக்களிலும் லஞ்ச ஊழல் அதிகமாக இருப்பதைப்பற்றி ஒருவராலும் மறுக்க முடியாது. பேப்பர்கள் அதிகமாக டிலே ஆவதன் காரணமாக முக்கியமாக விவசாயிகள் அதிகமாகப் பாதிக்கப்படுகிறார்கள். துன்புறுத்தப்படுகிறார்கள். பல நஷ்டங்களுக்கும் பஞ்சாயத்துக்கள் உட்படுகின்றன. உதாரணமாக எடுத்துக்கொண்டால், சினிமாவுக்கு லைசென்ஸ் வழங்குவதில் தாமதம் இருக்கிறது என்று எங்கு பார்த்தாலும் ஒரே புகாராக இருக்கிறது. 'ரெட் டேபிஸம்' என்று சொல்வார்களே அது இருந்துகொண்டிருக்கிறது. இரண்டு வருஷங்களுக்கு முன்பு நம்முடைய சர்க்கார், சினிமாவுக்கு லைசன்ஸ் வழங்குவது சம்பந்தமான விதிகளைப் பரிசீலனை செய்து, குறுகிய காலத்தில், கூடிய சீக்கிரத்தில் லைசென்ஸ் வழங்கும்படியான வழிகளை ஏற்படுத்தியிருந்த போதிலும் இன்னும் அநேகவித தாமதங்கள் இருக்கின்றன. பேப்பர்கள் பல டிபார்ட்மென்ட்களுக்குப் போய்வர வேண்டியிருக்கின்றன. கலெக்டர் ஆபிசிலும், போர்டு ஆப் ரெவின்யூ ஆபிசிலும் தாமதம் இருக்கிறது. என்னுடைய சொந்த தொகுதியைப் பொறுத்தவரையில், அங்கு ஒரு சினிமாவுக்கு லைசன்ஸ் வழங்க மூன்றரை வருஷம் தாமதம் ஆயிற்று. அதனால் பஞ்சாயத்துக்குப்

14th December 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

பத்தாயிரம் ரூபாய் வரையில் நஷ்டம் ஏற்பட்டது. இதற்குக் காரணம் லஞ்ச ஊழல்தான். இப்படியெல்லாம் பஞ்சாயத்துக் களுக்கு அதிக நஷ்டம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது.

இதே போல்தான், ரைஸ் மில் லைசன்ஸ் வழங்குவது சம்பந்த மான பேப்பரும் டிலே ஆகிறது. எனக்குத் தெரிந்த இருவர் ரைஸ் மில் லைசன்சுக்காக மனுப்போட்டு மூன்று வருஷங்கள் ஆகின்றன. இன்னும் பேப்பர் ஒரு இலாகாவிலிருந்து இன்னொரு இலாகா வுக்குப் போய்க் கொண்டே இருக்கிறது. அங்கங்கே பலவிதமான லஞ்ச ஊழல் இருந்துகொண்டு வருகிறது. இதைத் தவிர்க்க அமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்யவேண்டும்.

எங்கள் ஜில்லாவைப் பொறுத்தவரையில் கலெக்டருக்கு அதிக வேலைகள் இருக்கின்றன. மீனம்பாக்கம் போவதற்கே மாதத்தில் 15 நாட்கள் ஆகின்றன. காஞ்சிபுரத்திலோ, திண்டிவனம் பார்ட ரிலோ கலெக்டர் 'காம்ப்' போயிருந்தால்கூட, அங்கு அவருக்கு ஒரு தந்தி வருகிறது, மத்திய சர்க்கார் அமைச்சர் வருவதாகவும், உடனே கலெக்டர் மீனம்பாக்கத்திற்குப் போய்ப் பார்க்க வேண்டும் என்றும் இதன் காரணமாக, மாதத்தில் குறைந்தது பத்து பன்னிரண்டு நாட்கள் ஏரோட்ரோமுக்கு போகவேண்டிய வேலை இருக்கிறது. இரண்டு வருஷங்களுக்கு முன்புகூட, பட்ஜெட் விவாதத்தின்போது நான் தெரிவித்ததற்கு அமைச்சர் அவர்கள் பதில் சொல்லியிருக்கிறார். செங்கற்பட்டு ஜில்லா போலீஸ் சூபரிண்டென்டுக்கும் கூட இந்தப் பொறுப்பு இருக்கிறது. போலீஸ் சூபரின்டெண்டும், ஜில்லாக் கலெக்டரும் விமான நிலையத்திற்குச் சென்று, வருகிறவர்களை வரவேற்பதற்கே மாதத்தில் பெரும் பகுதி போய்விடுகிறது. ஆகவே, இதற்காக செங்கற்பட்டு மாவட்டத்தில் 'ரிஸெப்ஷன் கலெக்டர்' என்று தனியாக ஒரு கலெக்டரை நியமித்தால்கூட சரியாக இருக்கும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : செக்ரடேரியட்டிலே கூட வைத்துவிடலாம்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : செக்ரடேரியட்டிலே வைத்தாலும் நன்றாக இருக்கும். மெட்ராஸ் போலீசுக்கு இந்தப் பொறுப்பை ஒப்புவித்துவிட்டால் நன்றாக இருக்கும். இதை அமைச்சர் அவர்கள் நன்கு பரிசிலனை செய்யவேண்டும், ஜில்லாக் கலெக்டர் 15 நாட்களாவது ஒரு மாதத்தில் ஆபீசிலிருந்து வேலை பார்த்தால் வேலை நன்றாக நடக்கும். தற்போது கலெக்டருக்குப் பலவித வேலைகள் இருக்கின்றன. தொல்லைகளும் இருக்கின்றன. அமைச்சர்கள் போகும்போது அவர்களோடு போக வேண்டியவர் களாக இருக்கிறார்கள். சில இடங்களில் இது தவிர்க்க முடியா தது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். டிஸ்ட்ரிக்ட் ரெவினியூ ஆபீசரைப் போட்டும் கலெக்டருடைய வேலை குறையவில்லை என்பதை அநேக கலெக்டர்களை நான் பார்த்துப் பேசியபோது சொன்னார்கள். டிஸ்ட்ரிக்ட் ரெவினியூ ஆபீசருக்கு அலுவல்கள் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதைப் பற்றியும் நான்

முன்பு ஒரு தடவை சொன்னேன், ஜில்லாவை இரண்டாகப் பிரித்துவிடவேண்டும் என்று. ஜில்லாவை இரண்டாகப் பிரித்தால் கட்டிடங்கள் கட்ட செலவு ஏற்படலாம் என்றாலும், நாம் பஞ்சாயத்து யூனியனுக்காக ஒரு லட்சம் ரூபாய் விதம் கட்டிடம் கட்டுகிறோம். சிப்பந்திகளும் போடுகிறோம். அதுபோல், இதற்கும் சற்று செலவானாலும், ஜில்லாவை இரண்டாகப் பிரித்துவிட்டால் அநேக நன்மைகள் இருக்கும். எப்படியிருந்தாலும் கலெக்டர் கூடியவரையில் ஹெட்க்வார்ட்டர்ஸில் இருக்க வேண்டும். ஸப்-கலெக்டரும் இருக்கவேண்டும். வெள்ளைக்காரர்கள் இருந்தபோது, டிடென்ஷன் லிஸ்டு முறை இருந்தது. ஒவ்வொரு வாரமும் 'பெண்டென்ஸி ஆப் பேப்பர்ஸ்' பற்றி விசாரிக்கப்படுவதுண்டு. ரெவினியூ டிவிஷனல் ஆபீசிலும், ஸப்-கலெக்டர் ஆபீசிலும் பேப்பர்கள் 'டிஸ்போஸல்' ஆகாமல் எத்தனை இருக்கின்றன, அவைகளெல்லாம் ஏன் 'டிஸ்போஸல்' செய்யப்படவில்லை என்பதைக் கண்டுபிடித்து உடனடியாக தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். லஞ்ச ஊழல் நிறைய இருக்கிறது. சிப்பந்திகள் நிறைய ஏற்பட்டுவிட்டார்கள். ஒரு தாசில்தார் இருந்த இடத்தில் இப்பொழுது பத்து தாசில்தார்கள் இருந்து, மூலைக்கு மூலை போய்க் கொண்டிருக்கிறார்கள். லோன் தாசில்தார், டெவலப்மென்ட் தாசில்தார் என்றெல்லாம் இருந்துகொண்டிருக்கிறார்கள். கலெக்டர் ஆபீசிலே ஐந்தாறு பர்ஸனல் அஸிஸ்டென்ட்கள் இருக்கிறார்கள். அத்துடன் டிஸ்ட்ரிக்ட் ரெவின்யூ ஆபீசரும் இருக்கிறார். 'காஸ்ட் ஆப் அட்மினிஸ்ட்ரேஷன்' ஒரு பக்கம் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. ஆனால் பேப்பர் டிஸ்போஸல் ஆகாமல் குவிந்துகொண்டே இருக்கிறது. இது மிகவும் வருந்தத்தக்கது. நான் அதிகமாகப் பேச விரும்பவில்லை. தாமதங்கள் தடுக்கப்படவேண்டும். அதற்கு அமைச்சர் அவர்கள் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சினிமா லைசன்ஸ் வழங்குவதுபற்றி உடனடியாகப் பரிசீலனை செய்ய வேண்டும். இதில் தாமதம் இருந்தால் பஞ்சாயத்துக்களுக்கு நம்முடைய தமிழ்நாட்டில் பூராவும் எடுத்துக் கொண்டால், கோடிக் கணக்கான, லட்சக் கணக்கான ரூபாய் நஷ்டம் வரும் என்று நான் கண்டிப்பாகச் சொல்ல முடியும். எங்கள் பகுதியில் ஒரு பஞ்சாயத்திற்கே ஒரு வருஷத்தில் பத்தாயிரம் ரூபாய் நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. யாருக்கு லைசன்ஸ் கொடுத்தாலும், உடனடியாகப் பரிசீலனை செய்து முடிவாகச் சொல்லிவிடவேண்டும். தாமதம் தவிர்க்கப்படவேண்டும். இதைப் பற்றியும் பரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக் கொள்கின்றேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மான்யத்தின் பேரில், முக்கியமாக, ஜில்லா நிர்வாகத்தைப் பற்றிப் பல கனம் அங்கத்தினர்கள் பேசினார்கள். நாம் இன்றைக்கு ஜில்லா நிர்வாகத்தைப் பற்றிக் கவனிக்கும்போது, அந்த நிர்வாகத்தினுடைய தன்மையிலே ஏற்பட்டிருக்கும் மாறுதலை நாம் முதலிலே மனதில் வைத்துக்கொள்ள

14th December 1961] [Sri C. Subramaniam]

வேண்டும். முன்பு ஜில்லாக் கலெக்டர் என்றால், அவருக்கு முக்கிய மான பொறுப்பு வரி வசூல் செய்வது. அதற்கு அடுத்தபடியாக, டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட் என்றால், ஜில்லாவிலே ஒழுங்கும் அமைதியும் நிலவுவதைப் பார்த்துக்கொள்ள வேண்டியது. இது தான் அவர்களுடைய முக்கியமான பணியாக இருந்தது. இந்தப் பொறுப்பை அவர்கள் அந்தக் காலத்தில் திறம்பட நிர்வகித்து வந்தார்கள். இப்பொழுது சர்க்காரிலே பல பணிகளை எடுத்து, ஒவ்வொரு ஜில்லாவிலும் செய்யவேண்டுமென்று ஆரம்பித்திருக் கும் இந்த நேரத்திலே, முக்கியமான பணிகளின் பொறுப் பெல்லாம் இன்றைக்குக் கலெக்டர்தான் பார்க்கவேண்டியதாக இருக்கிறது. ஆகவே, முன்பு கலெக்டர் செய்துவந்த வேலைப் பளுவையும் இன்றைக்கு அவர்கள் பார்க்க வேண்டிய வேலைப் பளுவையும் சீர்தூக்கிப் பார்த்தால், அதில் இருக்கும் கஷ்டத்தை நாம் ஓரளவுக்குப் புரிந்து கொள்ள முடியும். இருந்தாலுங்கூட, சென்ற ஐந்தாண்டுத் திட்டங்களைப் பொறுத்த வரையில் என்னு டைய அனுபவத்தை வைத்துக்கொண்டு நான் சொல்ல முடியும். பொதுவாகச் சொல்கிறேன். எல்லாக் கலெக்டர்களைப் பற்றியும் சொல்ல முடியாது. ஆனால், பொதுவாக கலெக்டர்கள் அவர் களுடைய பணிகளை நல்ல முறையில், ஒரு மிஷனரி ஸீலோடு நாம் ஏற்றுக்கொண்டிருக்கும் திட்டங்கள் வெற்றிகரமாக நடைபெற வேண்டும், மக்களுக்கு அதனுடைய பலன் போய்ச் சேரவேண்டும் என்ற முறையில் பணியாற்றி வந்திருக்கிறார்கள். ஆகவே, இன்றைக்கு நற்பணி ஆற்றிய, திறமையாகப் பணியாற்றிய நேர் மையாகப் பணியாற்றிய எல்லோருக்கும் என்னுடைய பாராட்டு தலைத் தெரிவித்துக்கொள்வது மட்டுமல்ல, இந்தச் சபையினுடைய பாராட்டுதலையும் அவர்களுக்குத் தெரிவிக்கவேண்டியது நம்மு டைய கடமை என்பதை நான் பணிவோடு தெரிவித்துக்கொள் கின்றேன். பல கலெக்டர்கள் உண்மையிலேயே இன்றைக்கு ஒரு புதிய ஆர்வத்துடனே, புதிய லட்சிய உணர்ச்சியுடனே பாடு பட்டுக்கொண்டு வருகிறார்கள் என்பதை நான் ஆங்காங்கு போகும்போது கவனிக்கிறேன். அது, மிகவும் வரவேற்கத் தக்கது. ஆகையால் இதைப் போன்ற நல்ல பல காரியங்களை அவர்கள் செய்கிறபோதும்கூட சில நல்ல வார்த்தைகள் பேசிப் பாராட்டுவது அவசியம். எப்படி குறைகளைக் கண்டால் அதைக் கண்டித்துப் பேசுவது அவசியமோ அதைப்போலவே நல்ல பணிகள் செய்யும்போது நல்ல வார்த்தைகளைச் சொல்லி உற்சா கப்படுத்துவதும் அவசியம். சில சமயங்களில் நமக்குக் கிடைத்த தவறான தகவல்களை வைத்துக்கொண்டு சட்டசபையில் பொறுப் புள்ள அங்கத்தினர்களே சில விஷயங்களைச் சொல்வதனால் நன்றாக வேலை செய்து வரக்கூடியவர்களே "எத்தனை நல்ல வேலை களைச் செய்தால் என்ன? நமக்கு ஒரு நல்ல வார்த்தை சொல்லக் கூடியவர்கள் கிடையாது" என்பதாக மனம் உடைந்து போகக் கூடிய நிலைமை ஏற்பட்டிருப்பதையும் நான் கண்டிருக்கிறேன். அதுவும் முக்கியமாக ஜில்லா நிர்வாகத்தைப் பற்றிப் பேசும் போது நாம் கவனித்துப் பேசவேண்டுமென்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன். இன்று ஜில்லா அதிகாரிகளுக்குள்ள வேலைப் பளுவை எப்படிச் சமாளிப்பது என்பதற்காக யோசனை செய்து

இன்னொரு அதிகாரியை ஜில்லா ரெவின்யூ அதிகாரி என்று போடலாம் என முடிவு செய்திருக்கிறோம். அப்படி போட்டதன் காரணமாக நமக்குச் சில அனுபவங்கள் கிடைத்திருக்கின்றன. குறிப்பாக பார் கவுன்சில் லா என்று இருப்பதை அங்கத்தினர்கள் அறிந்திருப்பார்கள். அதில் உள்ள ஒரு விஷயம் முழுக்க முழுக்க உண்மை என்பது இதில் இருந்து புலப்பட்டது. ஒரு அதிகாரி செய்துகொண்டிருந்த வேலைப் பளுவைக் குறைக்கவேண்டுமென்று சொன்னால் அவருக்குக் கீழே இன்னொரு அதிகாரியைப் போட்டால் வேலைப் பளு குறைவது இல்லை. காரணம் இந்த அதிகாரி பார்த்த பிறகு மறுபடியும் அந்த மேலதிகாரிக்குப் போக வேண்டியிருப்பதனால் அவருக்குள்ள வேலை பளு குறையாததோடு தாமதமும்தான் ஆகிறது. ஆகவே, மேலதிகாரியின் வேலைப் பளுவை குறைக்க அவருக்குக் கீழே இன்னொரு அதிகாரியைப் போடுவதால் முடியாது என்பது தெரிகிறது. இது ஒரு இயற்கை விதி என்று பார் கவுன்சில் லா-வில் சொல்லியிருக்கிறார்கள். அதுதான் பல விஷயங்களில் உண்மையாகிக் கொண்டிருப்பதை இப்போது பார்க்கிறேன். ஆகவே டி.ஆர்.ஓ. போட்டு முடிகிற காரியம் இல்லை இது. உண்மையில் இரண்டாகப் பிரித்து அதிகாரத்தைக் கொடுப்பதன் காரணமாகத்தான் வேலை பளுவைக் குறைக்க முடியும் என்பதை உணருகிறேன். அதுவும் முன்போல ஜில்லா தலைமை நகரில் இருந்து இப்போது எல்லாக் காரியங்களையும் செய்ய முடியாது. அதுவும் கோயம்பத்தூர், சேலம் போன்ற பெரிய பரவலான ஜில்லாக்களில் முடியவே முடியாது. இருந்தும் இத்தனை வேலைப் பளுவை வைத்துக்கொண்டு அவர்கள் திறம்பட வேலை செய்து வருகிறார்கள் என்றால் இது அவர்களுடைய சேவைக்கு பரிகாரமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். இதைப்பற்றி ஒரு பாராட்டுதலாகவே விளங்குகிறது. ஆகவே ஒன்றிரண்டு சிறிய ஜில்லாக்களைத் தவிர மற்ற ஜில்லாக்களைப் பிரித்துவிடுவது தான் இதற்கு உண்மையான பரிகாரமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். இதைப்பற்றி தேர்தலுக்குப் பிற்பாடு பரிசீலனை செய்து ஒரு முடிவு எடுப்பார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன். பஞ்சாயத்துக்கள், பஞ்சாயத்து யூனியன்கள் எல்லாம் வந்துகொண்டிருக்கும் ஒரு குழப்பமான நிலைமையில் இதையும் கொண்டுவரக் கூடாது என்பதற்காகத்தான் இப்பிரச்னை ஒத்தி வைக்கப்பட்டது. தேர்தலுக்குப் பிற்பாடு இதைப் பரிசீலனை செய்து உடனடியாக ஒரு முடிவு எடுத்து—அதில் சில கஷ்டங்கள் ஏற்படலாம், அதையும் சமாளித்து—அதை நடைமுறைக்குக் கொண்டுவருவதன் மூலமாகத்தான் பல குறைகளை நீக்க முடியும் என்பது என்னுடைய தாழ்மையான கருத்து.

அதற்கடுத்தபடியாக, இன்று பல இளம் அதிகாரிகள் ஆங்காங்கு கலெக்டர்களாக மட்டும் அல்ல, ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர்களாகவும், சப்-கலெக்டர்களாகவும் பணியாற்றி வருகிறார்கள். இன்னும் கீழே பல குமாஸ்தாக்கள் வருகிறார்கள். எஸ்.எஸ்.எல்.ஸி. படித்தவர்கள் நேரே சர்வீஸ் கமிஷன் தேர்ந்தெடுத்தவுடன் குமாஸ்தாவாக வந்துவிடுகிறார்கள். எஸ்.எஸ்.எல்.ஸி.-யே அவர்கள் தமிழில் படித்துவிட்டு காரியாலயத்

14th December 1961] [Sri C. Subramaniam]

திற்கு நேரில் வந்தவுடன் அங்கே பேப்பர்களை ஆங்கிலத்தில் படித்துப் பார்த்து டிஸ்போஸ் பண்ணவேண்டும் என்கிறபோது எப்படி எழுதுவது என்று தெரியாமல் ஒன்றிரண்டு நாள் கையில் வைத்திருந்துவிட்டு கட்டி வைத்துவிடுகிறார்கள். அப்புறம் அவற்றையே அடையாளம் தெரியாமல் அழித்துவிடக்கூட முயல்கிறார்கள். ஆகவே, இதனால்தான் கீழே ஓரளவு தாமதம், தரக் குறைவு எல்லாம் ஏற்பட்டிருக்கின்றன என்பதை நான் கண்டிருக்கிறேன். ஜில்லா அளவில் தமிழை நிர்வாக மொழியாக ஆக்கியிருப்பதனால் ஓரளவு இந்தக் குறை நீங்குவதற்கு சாதகமாக இருக்கும் என்று நம்புகிறேன். தரத்தை அதிகப்படுத்தவேண்டும் என்பதற்காகத்தான் இப்போது ரெவின்யூ இலாகா குமாஸ்தாக்களாக வருகிறவர்களுக்கு கொஞ்சம் பயிற்சி கொடுக்கவேண்டுமென்று செய்திருக்கிறோம். இந்த இலாகா மட்டும் அல்ல. மற்ற எல்லா இலாகா சிப்பந்திகளுக்கும் இந்தப் பயிற்சித் திட்டம் வரவேண்டியது அவசியம். இதன் காரணமாக ஓரளவு தரம் உயர்கிறது. லஞ்சப் புகாரைப் பற்றி எதிர்க் கட்சித் தலைவர் சொன்னார்கள். எல்லோரும் வாங்குகிறார்கள் என்று சொல்ல முடியாது. சில விடங்களில் இருக்கின்றன. இதில் ஒரு கஷ்டம் என்னவென்றால் நடவடிக்கை எடுக்கிறபோது சாட்சியம் வரமாட்டேன் என்கிறது. இவன் போய் அவர்கள் காலில் விழுந்துவிடுகிறான். "என் குடும்பமே நாசமாகி விடும்" என்று அழுகிறபோது அவர்கள் "போடா" என்று விடுகிறார்கள். நமக்கு நிச்சயமாக லஞ்சம் வாங்கியிருப்பான் என்று தெரிந்தும் சாட்சியம் இல்லாததனால் நடவடிக்கை எடுக்க முடிவதில்லை. நடவடிக்கை எடுத்து வேலையைவிட்டு நீக்கினாலும் ஹைக்கோர்ட்டுக்குப்போய் குற்றமில்லை என்று நிரூபிக்கிறான். அவர்கள் இவனை திரும்ப வேலைக்கு எடுத்துக்கொள்ளவேண்டும் என்று உத்தரவு போடுகிறார்கள். இதையெல்லாம் மனதில் வைத்துக்கொள்ளவேண்டியது அவசியமாகிறது.

அடுத்தபடியாக, திரு. அன்பழகன் அவர்கள் சில புகார்களைச் சொன்னார்கள். புகார்கள் வரும்போது ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இரண்டு பக்கத்து விஷயங்களையும் தெரிந்துகொள்ள வேண்டும். சாதாரணமாக புகார் செய்துகொள்ள வருகிறவர்கள் தங்கள் பக்கம் சாதகமாகவே பல விஷயங்களை எடுத்துச் சொல்வார்கள். தங்களுக்கு ஏதோ பெரிய அநீதி இழைத்துவிட்டது போலச் சொல்வார்கள். அதை அப்படியே முழுக்க முழுக்க சரி என்று வைத்துக்கொள்வது தவறு. அவற்றில் உண்மையும் இருக்கலாம். அதைப்பற்றி விசாரித்துத் தெரிந்துகொள்ளாமல் சட்டசபையில் அப்படியே பேசிவிடுவது தவறு என்று தெரிவிக்க விரும்புகிறேன். அதைப் பற்றி முன்கூட்டி சம்பந்தப்பட்ட அமைச்சர்களிடத்தில் தெரியப்படுத்தினால் அவர்கள் அதைப்பற்றி விசாரித்து உண்மையென்ன என்று சொல்லக்கூடும். அமைச்சர்கள் சொல்வது கனம் அங்கத்தினர்களுக்குத் திருப்தி அளிக்காவிட்டால் சட்டசபையில் தெரிவித்துக் கொள்ளலாம். அது இல்லாமல் யாராவது வந்து புகார் செய்துகொண்டால் உடனே அங்கத்தினர்கள் அதைச் சட்டசபையில் சொல்வது என்றால் இப்படிச் சொல்வதனால் அமைச்சர்கள் அறிவார்கள், அதிகாரிகள் பயந்து

விடுவார்கள், நமக்குச் சாதகமாக உத்தரவு வரும் என்கிற தப்பான எண்ணம் சர்க்கார் சிப்பந்திகளிடையே உண்டாகி விடும். குற்றம் செய்தவர்களே கூட வந்து சொல்லிக்கொள்வார்கள். ஆகவே, இப்படிச் சொல்வது சரியாகாது என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

ஆகவே, சட்டசபை மெம்பர்களிடம் குறைகள் சொன்னாலும் அவர்கள் அதை மந்திரிக்கு அனுப்பி விசாரணை நடத்தி அதில் உண்மை என்னவென்று தெரிந்த பிற்பாடுதான் சட்டசபை மெம்பர் கூட இதில் தலையிடுவார் என்ற சூழ்நிலை ஏற்பட்டால் தவறாக வந்து சொல்வதைத் தவிர்க்க முடியும். அநீதி விளைய வில்லை, தவறு நடக்கவில்லையென்று சொல்லவில்லை. நம்மிடம் வருவதைக் கேட்டு பட்ஜெட் போன்ற விவாதங்களின்போது அவைகளை எடுத்துச் சொல்லும்போது, அந்த நிலையிருந்தால் குற்றம் செய்தவர்கள்கூட இதைப் பயன்படுத்திக் கொள்வர் என்று நான் எச்சரிக்க விரும்புகிறேன். திராவிட முன்னேற்றக் கழக உப தலைவர் அவர்களை கேட்டுக் கொள்கிறேன், இப்படிப்பட்ட புகார்கள் வந்தால் அவைகளை மந்திரிகளை நம்பி அனுப்பி வையுங்கள் என்று. அவரிடம் சொல்லப்படுபவை எல்லாம் உண்மை என்று நினைத்து வாதாடினால் அதனால் தவறானதொரு சூழ்நிலைதான் ஏற்படும். ஒரு பஞ்சாயத்து போர்ட் பிரசிடென்ட் பற்றி சொன்னார்கள். ஸ்ரீனிவாச ஐயர் அவர்கள் எப்படி நடந்தது என்று அவருக்கு தெரிந்ததை எடுத்துச் சொன்னார்கள். இரு பக்கமும் தெரிந்தால்தான் எது நியாயம் என்று முடிவு செய்ய முடியும். பஞ்சாயத்து ஆட்சி இப்பொழுதுதான் புதிய சட்டத் தின்கீழ் ஏற்பட்டிருக்கிறது. தவறுகள் அதிகாரிகளிடம் அல்லது பஞ்சாயத்து தலைவர்களிடம் ஏற்படலாம். அதைப் பார்த்து திருத்திக் கொள்ளவேண்டும். வேண்டுமென்றே குற்றம் செய்கிற வர்கள், பணத்தில் கை வைக்கிறவர்கள் இவர்களிடம் தயவு தாட்சண்யம் பார்க்கக்கூடாது. அப்படிப் பார்த்தால் பஞ்சாயத்து ஆட்சி முறை வீணாகப் போய்விடும், வெற்றி பெறாமல் போய் விடும். ஸ்ரீபெரும்புதூர்பற்றி குறை சொன்னார்கள். நேற்று பதில் சொன்ன பிறகு எனக்கும் அதில் சமாதானம் ஏற்படவில்லை. ஆகவே, அதை மறுபரிசீலனை செய்யவேண்டுமென்று சொல்லி அனுப்பியிருக்கிறேன். யார் தவறு செய்தாலும் அத் தவறை நீக்க உடனடியாக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப் படும். பல முக்கிய விஷயங்களை ஜில்லா நிர்வாகம் மூலம் நிறை வேற்றவேண்டியிருப்பதால் நிர்வாக இயந்திரம் நல்லமுறையில் இயங்க ஒரு சூழ்நிலை ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும். அதில் குறைகள் ஏற்படாதிருக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டும். தவறு செய்பவர்களுக்கு போதிய தண்டனை கொடுத்து மற்றவர்கள் தவறு செய்யாமல் இருக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதை ஒப்புக் கொள்கிறேன். அப்படி நிர்வாகம் நன்கு இயங்க சர்க்கார் எல்லா வித முயற்சிகளும் செய்யும் என்று சொல்லிக்கொண்டு இம் மான்யத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

14th December 1961]

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum of not exeeding Rs. 1,62,00,000 as advance grant for the year 1962–63 under Demand XI—District Administration and Miscellaneous."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XII—Administration of Justice.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exeeding Rs. 44,50,000 as advance grant for the year 1962–63 under Demand XII—Administration of Justice."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 44,50,000 as advance grant for the year 1962–63 under Demand XII—Administration of Justice."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XIII—Jails.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 46,50,000 as advance grant for the year 1962–63 under Demand XIII—Jails."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 46,50,000 as advance grant for the year 1962–63 under Demand XIII—Jails."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XIV—Police.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,23,00,000 as advance grant for the year 1962–63 under Demand XIV—Police."

DEPUTY SPEAKER : **Motion moved—**

"That the Government be granted a sum not exceeding Rs. 2,23,00,000 as advance grant for the year 1962–63 under Demand XIV—Police."

SRI K. ANBAZHAGAN : சட்டமன்றத் தலைவர் அவர்களே, காவல்துறையினரைக் குறித்து, நடைபெற்று வருகிற சில நடவடிக்கைகளை விளக்கிக் கூறுவதற்காக மட்டும்தான் நான் இப்பொழுது பேசுகிறேன். காவல்துறையினர் முழுவதும் குற்றம் சாட்டக்கூடியவர்கள் என்றோ அத்தனை பேர்களும் குற்றம் செய்கிறார்கள் என்றோ இப்பொழுதும் குறிப்பிடவில்லை, இதற்கு முன்பும் குறிப்பிட்டதில்லை. ஆனால் அமைச்சர்கள் பதில் அளிக்கிற நேரத்தில் காவல்துறையைக் குற்றம் சாட்டுவது தவறு

என்று சொல்வதின் மூலம் அந்த இலாகாவையே குற்றம் சாட்டுவதாக நினைத்து பதிலளித்து விடுகிறார்கள். சற்று முன்பு அமைச்சர் அவர்கள், குற்றங்களை கட்டு கட்டாகக் கொண்டுவந்து சட்டமன்றத்தில் பேசுவது முறையல்ல என்றும் அவைகளை அமைச்சர்களுக்கு அனுப்புவது நல்லதென்றும் கருத்து தெரிவித்தார்கள். உள்துறை அமைச்சர் அவர்களுக்கு ஏறத்தாழ இரண்டு திங்களுக்கு முன்னால் இப்படிப்பட்ட குறைகள் சிலவற்றை தெரிவித்து இப்படிப்பட்ட குறைகள் ஏற்பட்டிருக்கின்றன, அவைகளை நீங்கள் கவனிக்க வேண்டும், இதை உடனடியாக ஷார்ட் நோட்டீஸ் க்வஸ்டினாக, குறுகிய கால கேள்வியாக ஏற்று பதில் அளிக்க வேண்டுமென்று தந்திருக்கிறேன், இரண்டு திங்களுக்கு முன்பு. அந்த அவசரக் கேள்வி தாமதக் கேள்வியாகி இயல்பாக வருகிற நேரத்தில் வந்ததே தவிர அது உடனடியாக எடுத்துக் கொள்ளப் படவில்லை. உள்துறை இலாகாவிற்கு யார் அமைச்சர் என்று தெரியாது அடிக்கடி மாறுகிற சூழ்நிலையிருப்பதால் அதற்கு யார் பதில் அளிப்பது என்று தெரியாத நிலையிருந்ததால் உடனே இதற்கு பதில் அளிக்க முடியவில்லை என்று பதில் சொன்னார்கள். சில குற்றங்குறைகளை இம்மன்றத்தில் எடுத்துச் சொல்கிறோம் என்றால் அவைகள் பற்றி அதிகாரிகளிடம் முறைப்படி கருத்து தெரிவிக்காமல் அல்ல. கருத்து தெரிவித்தும்கூட அதிகாரிகள் அவற்றை புறக்கணித்தாலும்கூட வருந்தத் தேவையில்லை. ஆனால் நேர்மாறாக நடந்து கொள்கிறார்கள். அப்பொழுது நீதியைப் பெறுவதற்கு, சட்டமன்றத்தில் அக்காரியங்களை எடுத்து சொல்கிறார்கள் என்று தெரிந்தால் பின்னாலாவது அதிகாரிகள் தவறாக நடக்கமாட்டார்களே என்றுதான் சொல்கிறோமே தவிர இதைப் பற்றிய பட்டியல் வெளியிடவேண்டுமென்ற நோக்கத்தோடல்ல. இதே மன்றத்தில், போலீஸார் தவறு இழைப்பதைப் பற்றி திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் கூறியிருக்கிறார்கள். இரண்டு நாட்களுக்கு முன்பு திரு. கோவிந்தசாமி அவர்களும் குறிப்பிட்டார்கள். மதுராந்தகத்தில் இருக்கிற பஞ்சாயத்து போர்ட் தலைவர் பி. சிவானந்தம் அவர்கள் பள்ளிமாணவர்களுக்கு மதிய உணவு வழங்கும் குழுவின் தலைவர், அரசாங்க மெடிக்கல் அட்வைஸரிக் கமிட்டியிலுள்ள உறுப்பினர், கூட்டுறவு பாங்க், கூட்டுறவு மார்க்கட்டிங் சொஸைட்டி இவைகளில் உறுப்பினராக இருப்பவர்—அந்த நண்பரை அந்த வட்டாரத்தில் இருக்கிற போலீஸ் அதிகாரிகள், அவரை ரௌடி லிஸ்டில் சேர்த்து வைத்திருக்கிறார்கள் என்று வருத்தத்தோடு எழுதியிருக்கிறார்கள். அவர் தூங்குகிறபோதுகூட இரவு 12 மணிக்கு போலீஸாரை அனுப்பி அவர் வீட்டில் தூங்குகிறாரா என்று பரிசீலனை செய்கிறார்கள். சில நேரத்தில் போலீஸ் ஸ்டேஷனுக்கு வரச் சொல்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் சிவானந்தம் அவர்களை அப்படி வைத்திருப்பது போல், சோஷியலிஸ்ட் கட்சித் தலைவர் துரை பாபு என்று நினைக்கிறேன், அவர்களையும் அந்த லிஸ்டில் சேர்த்து வைத்திருக்கிறார்கள். அங்குள்ள சர்கிள் இன்ஸ்பெக்டரைப்பற்றி இதற்கு முன்னால் வந்துள்ள புகார்களை அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்து பார்த்தால் அவர்கள் ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை மாற்றப்பட்ட நிலையும், சில கட்சிக்காரர்களுக்கு சார்பாக

14th December 1961] [Sri K. Anbazhagan]

யிருந்து வேறு கட்சிக்காரர்களுக்கு தந்திருக்கிற தொந்தரவுகளும் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் சிலர் தாக்கப்பட்டபோது தாக்கியவர்கள்மீது வழக்குப் போடாமல் மறைத்து வைத்து பாது காப்பு அளித்த நிலையும், பஞ்சாயத்து தேர்தலில் தலையிட்டு வோட்டு வாங்குவதற்கு சில உறுப்பினர்களைக் கட்டாயப்படுத்தி வாங்கிய செய்திகளையும் பார்த்தால் போலீஸ் இலாகாவிலேயே இவர் இருக்கலாமா என்பதே சந்தேகத்திற்குரியதாகும். அவரது பெயரை நான் சொல்ல விரும்பவில்லை. சென்னை நகரில் அவர் இருந்தபோதும் அவர்மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. அக் குற்றச் சாட்டுகள் போயிற்று என்று எண்ணினால் இடத்திற்கு இடம் மாற்றி அவரது ஆதிக்கத்தில் நடைபெற்று வருகிற அக் கிரமங்கள் ஏராளம். நெற்குணத்தில் நடக்கும் அக்கிரமங்களைப் பற்றி போலீஸ் அதிகாரிகளிடம் தெரிவித்தும், சிலர் சார்பில் இருந்து சிலர் பேரில் வழக்குகள் போட்டுக் கொண்டேயிருக்கிறார் கள். உண்மை தெரியாது சில சமயங்களில் தவறுகள் நடக்கலாம். ஆனால் தொடர்ந்து ஒரு சர்கிள் இன்ஸ்பெக்டர் நிர்வாகத்தில் தவறுகள் தொடர்ந்து நடந்து, சில கட்சிகளுக்கு தீமையும், ஒரு கட்சி சார்பில் சலுகையும் கொடுப்பது என்று சொன்னால், அது தொடர்ந்து நடைபெறுமானால், இது குறித்து நிதியமைச்சர் அவர் கள் எண்ணிப் பார்ப்பார்களேயானால் அவர் போலீஸ் அமைச்சராக இல்லாமல் இருப்பதற்கு மகிழ்ச்சியடைவது தவிர வேறு வழியில்லை. எல்லாக் கட்சியினருக்கும் ஒரேவிதத்திலே நீதி வழங்கப்படவேண்டும். திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் சுவரொட்டிகள் ....

It being 12 o'clock, the Deputy Speaker proceeded, pursuant 12 noon.
to the rules, successively to put forthwith the question on the Demand under discussion and also the question on the other Demands notice of which had been given by the Government.

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,23,00,000 as advance grant for the year 1962-63 under Demand XIV—Police."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XV—Education.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 7,94.00,000 as advance grant for the year 1962-63 under Demand XV—Education."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XVI—Medical.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 2.04.00.000 as advance grant for the year 1962-63 under Demand XVI—Medical."

The Demand was put and carried and the Grant was made.

[14th December 1961

*Demand XVII—Public Health.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 81,50,000 as advance grant for the year 1962–63 under Demand XVII—Public Health."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XVIII—Agriculture.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,62,50,000 as advance grant for the year 1962–63 under Demand XVIII—Agriculture".

The Demand was put and carried and the Grant was made.

*Demand XIX—Fisheries.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 16,50,000 as advance grant for the year 1962–63 under Demand XIX—Fisheries".

The Demand was put and carried and the Grant was made.

*Demand XX—Animal Husbandry.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 50,00,000 as advance grant for the year 1962-63 under Demand XX—Animal Husbandry."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXI—Co-operation.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 86,50,000 as advance grant for the year 1962–63 under Demand XXI—Co-operation".

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXII—Industries.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,05,50,000 as advance grant for the year 1962–63 under Demand XXII—Industries".

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXIII—Cinchona.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 5,50,000 as advance grant for the year 1962–63 under Demand XXIII—Cinchona."

The Demand was put and carrried and the Grant was made.

14th December 1961]

*Demand XXIV—Khadi.*

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 7,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXIV—Khadi."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXV—Labour including Factories.*

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 12,50,000 as advance grant for the year 1962-63 under Demand XXV—Labour including Factories."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXVI—Harijan Uplift.*

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,14,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXVI—Harijan Uplift."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXVII—Community Development Projects, etc.*

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,06,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXVII—Community Development Projects, etc."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXVIII—Civil Works—Works.*

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 3,09,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXVIII—Civil Works—Works."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXIX—Civil Works—Establishment and Tools and Plants.*

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 59,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXIX—Civil Works—Establishment and Tools and Plants."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXX—Civil Works —Grants-in-Aid.*

DEPUTY SPEAKER : **The question is—**

"That the Government be granted a sum not exceeding Rs. 82,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXX—Civil Works—Grants-in-aid."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXXI—Famine.*

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXXI—Famine."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXXII—Pensions.*

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 68,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXXII—Pensions."

The Demand was put and carried and the grant **was made.**

Demand XXXIII—Stationery and Printing."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 51,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXXIII—Stationery and Printing."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXXIV—Miscellaneous.*

DEPUTY SPEAKER : **The question is—**

"That the Government be granted a sum not exceeding Rs. 57,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXXIV—Miscellaneous."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXXV—Other Miscellaneous Contributions and Assignments.*

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 60,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXXV--Other Miscellaneous—Contributions and Assignments."

**The Demand was put and carried and the Grant was made.**

14th December 1961]

*Demand XXXVI—Road Transport Schemes.*

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 1,07,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXXVI—Road Transport Schemes."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXXVII—Compensation to Zamindars.*

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 30,00,000 as advance grant for the year 1962-63 under Demand XXXVII—Compensation to Zamindars."

The Demand was put and carried and the Grant was made.

Demand XXXVIII—Capital Outlay on Forests."

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 13,50,000 as advance grant for the year 1962-63 under Demand XXXVIII—Capital Outlay on Forests.'

The Demand was put and carried and the Grant was made.

*Demand XXXIX—Capital Outlay on Irrigation.*

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 3,46,50,000 as advance grant for the year 1962-63 under Demand XXXIX—Capital Outlay on Irrigation."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XL—Capital Outlay on Public Health.*

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 88,50,000 as advance grant for the year 1962-62 under Demand XL—Capital Outlay on Public Health."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XLI—Capital Outlay on Agriculture.*

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 5,00,000 as advance grant for the year 1962-63 under Demand XLI—Capital Outlay on Agriculture."

The Demand was put and carried and the Grant was made.

[14th December 1961

*Demand XLII—Capital Outlay on Industrial Development.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,72,00,000 as advance grant for the year 1962-63 under Demand XLII—Capital Outlay on Industrial Development."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XLIII—Capital Outlay on Civil Works.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,89,00,000 as advance grant for the year 1962-63 under Demand XLIII—Capital Outlay on Civil Works."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XLIV—Capital Outlay on Road Transport Schemes.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 78,00,000 as advance grant for the year 1962-63 under Demand XLIV—Capital Outlay on Road Transport Schemes."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XLV—Commuted Value of Pensions.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 3,00,000 as advance grant for the year 1962-63 under Demand XLV—Commuted Value of Pensions."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XLVI—Capital Outlay on Schemes of Government Trading.*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,96,00,000 as advance grant for the year 1962-63 under Demand XLVI—Capital Outlay on Schemes of Government Trading."

The Demand was put and carried and the Grant was made.

*Demand XLVII—Loans and Advances by the State Government*

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 8,14,00.000 as advance grant for the year 1962-63 under Demand XLVII—Loans and Advances by the State Government."

The Demand was put and carried and the Grant was made.